THE OOLIAN

# ஊழியன்

## தேசீய சித்திர வாரப்பத்திரிகை

மலர் 14. 14—9—34. இதழ் 11.



நாகூர் துர்க்கா மசூதியின் மனோகரமான காட்சி. பிரசித்திபெற்ற கந்திரி உத்சவம் நாகூரில் நாளது செப்டம்பர் மீ நடைபெறும். —Pon

விலை அணா 2

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கச. சென்னை, பவ௵ ஆவணி௴ 29௳ வெள்ளி (14-9-1934) இதழ் கக.


*இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா*
*தனமேறி ஈடி லாது*
*சொந்தவா சேபுரியத் துயர்போக்கி*
*யாவருமே சுகவாழ் வெய்த*
*இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்*
*இழிவுயர்வென் இயற்கை ஓங்க*
*கந்தலிலா ஊழியமே நான் கொண்டேன்*
*நல்லனவெந் நாளும் வாழ்க!*

## பாரதி திருநாள்

நடந்த செவ்வாயன்று பாரதி திருநாள் வந்தது. பாரதிகள் பலர் நாட்டில் உளர் எனினும் 'பாரதி' என்ற சிறப்புப் பெயருக்குரியார் ஒரே ஒருவர்தான். அவர் நம்மிடையே வாழ்ந்தார்; உயரிய பாக்களால் தமிழ்நாட்டை ஆட்கொண்டார்; சில ஆண்டுகட்கு முன்னே நம்மைவிட்டு மறைந்தார். அவர்தான் சுப்பிரமணிய பாரதியென்று தமிழர்க்குச் சொல்ல வேண்டுவதில்லை. அப்பெரியார் திருநாள் இந்த வாரம் நடந்தது. பாரதிபோன்றாரின் திருநாளைக் கொண்டாட வேண்டுவது தமிழரின் இன்றியமையாக் கடமை.

இன்றையத் தமிழர் வீறுகொண்டெழுமாறு பாக்கள் கோத்த தனிப்பெருமை நமது பாரதியாருக்கு உரியது. தமிழ் அரசியல் மேடைகளில் பாரதியார் பா முழங்காத இடம் இல்லையென்று இயம்புவது பிழையாகாது. சமீப காலத்துப் புலவர்களுள், உயர்ந்த பொருள்களை, எளிய நடையில், சீரிய கொள்கைகள் புகுத்தி, அழகிய வீரத் தமிழில் பாடியதில் பாரதியாருக்கு இணையான கவி எவருமில்லையென்பது தேற்றம்.

இக்காலத்துப் பலப்பலர் தமிழே பயிலாமல் பாக்களை முழக்கத் தொடங்கி விடுகிறார்; வாயில் வந்ததை யெல்லாம் சொல்லிக் கற்றை கற்றையாகப் பாடிக் குவித்து விடுகிறார். அவற்றில் பல அச்சு வாகனமும் ஏறி விடுகின்றன. எடுப்பு, முடிப்பு, பொருள், பொருத்தம் முதலியன சிறிதுமின்றிப் பாக்கள் பல செய்து குவித்துப் பாவலராகி விடுகின்றார் பல்லோர். இப்புதிய கூட்டத்தின் சிறுமையைப் போக்கப் பெருந் துணைபுரிவது பாரதியாரின் புதிய முறைகொண்ட அரிய பாக்களே.

பாரதியார் சங்க இலக்கியங்களையும் கம்பரையும் இன்ன அருந்தமிழ் நூல்களையும் நன்கு பயின்றிருந்தார் என்பதை அவர் பாக்கள் கூறிநிற்கின்றன. பாரதியார் பெரும்பாலும் கண்ணி—சிந்து முதலிய வடிவிலேயே பாக்கள் கோத்தார். இதுகொண்டு அவர் பழய விருத்த முறையிற் பாட அறியார் எனக் கூறுதற்கில்லை. விருத்தப் பாக்களும் பாரதியார் பாடியிருக்கின்றார். அவர் பாடிய விருத்தங்கள் எந்தப் பழம் பெரும் புலவருக்கும் தோற்கக்கூடியன அன்று என்பதை நடுநிலையோடு ஆராயும் பாவலர் எவரும் மறுக்கலாற்றார். சுவையும் பொருளும் ஒருங்கேகொண்ட விருத்தங்களும் வெண்பாக்களும் பாடியிருக்கின்றார் பாரதியார். ஆனால் அவர் பாடிய பாக்களில் அவைகளைவிட சிந்து, கண்ணி முதலியவை அதிகம்.

அதற்குக் காரணம், பாரதியார் நாட்டிற்கு இன்று அவைகளே மிகுதியும் தேவை என எண்ணியதேயாகும். 'பா' எவ்வடிவானாலென்? நோக்கத் தக்கது பொருளும் சுவையுமேயன்றோ? பழமை ஒன்றையேபற்றி மருளும் கசட்டுத் தமிழ்ப் புலவர் என்போர் பாரதியாரைக் குறை கூறுவர். கண்ணிப் பாக்கள் தாழ்ந்தவை என்பது அன்னார் கருத்து. பொருளைப்பற்றிய கவலை அவர்கட்கு இருப்பதில்லை. சுவையை அவர் அறியவே மாட்டார்.

யாப்பிலக்கணம் (பாட்டுப் பாடுவதற்காக முன்னே எழுதி வைக்கப்பட்ட முறை) ஒன்றே அவர்கள் குறிக்கோள். 'ஏராரும், காராரும்' 'சீரோங்கு, தாரோங்கு' 'திருவார், மருவார்' என்று எதுகைத்தொடையை அடுக்குவதைத் தவிர வேறொன்றையும் அப் புலவரென்போர் அறியார். அச்சிலரே பாரதியாரைப் பழிப்பர். அவரைத் தமிழ்நாடு மதிப்பதில்லை.

உண்மையில் தமிழ்ச் சுவை கண்ட புலவர் எவரும் பாரதியாரின் பா நயத்தைப் பருகாதிரார். தமிழ் நூல்களை நிறையப் படித்த, அறிவு நிரம்பிய தமிழறிஞர் பலர் பாரதியாரைப் பாராட்டுவது கண்கூடு. பாரதியார் 'பா'வின் ஓட்டத்தில் யாரே மயங்காதிருக்க முடியும்? அவர் பாக்களின் நயத்தை உட்புகுந்து ஆராய்ந்து கூறும் வேலையை இங்கு நாம் தொடங்கப் போவதில்லை. அது மிகவும் பெருகும்.

சமீப காலத்தில் தமிழருக்குப் பெரு விருந்தளித்த—தமிழரின் வாழ்வில் புதுமையைப் புகுத்திய—வீரத்தைக் கொட்டிய—காதலை அள்ளி வீசிய பாரதியாரைத் தமிழர் ஒருநாளும் மறக்கலாகாது. அவர் நினைவாக அவர் நாளில் விழா எடுப்பதென்பது அவர் அரிய கொள்கைப் பாக்களை யாண்டும் நன்கு பரப்ப முயலுவதாகவே இருத்தல் வேண்டும்.

---

# இடி முழக்கம்

### என்ன காலமோ!

பண்டித மாளவியா வகுப்புத் திட்டத்தை ஒரு பெரிய விஷயமாகக் கொண்டு காங்கிரஸிலிருந்து விலகிக் கொள்வது மிகவும் வருந்தத் தக்கது. பெரிய தேசீயத் தலைவர்கட்கும், சில சமயங்களில் அற்பப் பிரச்னைகள் பெரிதாக விச்வ ரூபமெடுத்து அவர்களுடைய மனத்தை மாற்றிவிடுவது காலத்தின் கோளாறுதான் என்று சொல்ல வேண்டும். மிகவும் பரந்த நாடாகிய பாரத தேசத்தில் வகுப்பு வாதங்கள் இல்லாது போய்விடும் என்று எதிர்பார்ப்பது அதிசயமே. அதற்காக முக்கியப்பிரச்னையை மறந்து விடுவது—கைவிடுவது என்று கூறினாலும் கூறலாம்—வியப்பிலும் வியப்பே. உலக ஒற்றுமை என்ற அகில தேச இலக்ஷியங்கள் பிறந்து கொண்டிருக்கும் இக்காலத்தில் சிறிய வகுப்புப்பிரச்னை நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் ஒரு பெரிய தேசியத் தலைவருக்குத் தடை செய்யுமென்றால், அதுவும் காலத்தின் விசித்திர கதிதான் என்று சொல்ல வேண்டும்.

### கோவை மகாநாடு

வரும் சனி, ஞாயிறுகளில் கோயமுத்தூரில் கூட விருந்த தமிழ் மாகாண அரசியல் மகாநாடு செப்டம்பர் 29, 30 தேதிகட்குத் தள்ளிவைக்கப்பட்டு விட்டது. தள்ளிவைக்கப்பெற்ற செய்தி செவ்வாய்க்கிழமைதான் அறிவிக்கப்பட்டிருக்கிறது. நாள் இவ்வளவு நெருங்கி வந்த பிறகு ஒத்திப்போடப்பட்டது, மகாநாடு செல்லும் நோக்கத்தோடு வேலைத் திட்டம் அமைத்துக் கொண்ட பலருக்கு அசௌகரியத்தை உண்டாக்கியிருக்கும் என்பது நிச்சயம். மகாநாட்டைத் தள்ளிவைக்கச் சொன்னது வரவேற்புக்கழகத்தார் என அறிவிக்கப்படுகிறது. குறித்த தேதிகளில் நடத்த முடியாதென அவர்கள் கருதியிருப்பரேல் இன்னும் முன்னதாகவே இம்முயற்சி செய்திருந்தால், நன்றாக இருந்திருக்கும். மகாநாட்டுக்குத் தலைவராகத் திருவாளர் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார். தக்க தலைவரைச் சிபார்சு செய்த ஜில்லாக் கமிட்டிகளைப் பாராட்டுவோம்.

### செட்வூடின் வாய் வீச்சு

ராஜாங்க சபையில் விவாதிக்கப்படும் இராணுவ மசோதாவைப்பற்றிப் பேசும் பொழுது சேனாதிபதி செட்வூட் சிறு பிள்ளை மாதிரி, "உங்களுக்கென்ன தெரியும்? வெடிக்குண்டைக் கண்டிருக்கிறீர்களா? சர்க்கார் மசோதாவை எதிர்க்க உங்களுக்கு என்ன உரிமை உண்டு" என்று ஒரு போடுபோட்டாராம். இது நிரம்ப ரஸமான வாதம். பிறகு ஏன் இதைக் கொண்டுவந்து அரசியல் நாடகம் நடத்த வேண்டுமோ? ஆயுத பலத்தினால் பிரிட்டன் இந்தியாவைக் கைப்பற்றியதாம். இந்தியாவைக் கைப்பற்றுவதற்குப் பிரிட்டன் ஆயுத பலத்தை மட்டும் நம்பியிருக்க வில்லை என்ற பழங்கணக்குச் செட்வூடிற்குத் தெரியாது போலிருக்கிறது. அது போகட்டும், வெள்ளையரின் சுமைஎன்ற சுத்த ஹம்பக் பேச்சை உடைத் தெறிந்ததற்கு செட்வூடிற்கு நன்றி செலுத்த வேண்டியதுதான். பிறகு ஒரு வழவழா மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருக்கிறார். வேண்டுமென்று கண்டபடி பேசுவது, பிறகு அதற்கு ஒரு மன்னிப்புக்கேட்டுக்கொள்வது என்றால், என்ன வேண்டுமானாலும் நாக்கில் நரம்பில்லாமல் பேசலாம்.

### ஜப்பான் மூளை

வியாபார உலகம் முழுதும் ஜப்பான் மீது பொறாமைகொண்டு அதனை அடக்கி யொடுக்கிவிட முயன்றாலும், அது தன் அபார மூளையால் எப்படியாவது ஓரிடத்தில் செல்வாக்கை நாட்டி ஆதரவைப் பெற்றுக்கொண்டேயிருக்கின்றது. கொஞ்ச நாட்களுக்குள் முன் ஜப்பானியருக்கு எந்தத் தேசமும் தங்க இடம் கொடுக்கலாகாதென்ற முயற்சி மறைமுகமாக நடைபெற்றது; ஆனால் ஜப்பான் தந்திரமாக ஒரு பெரிய பிரபுவின் புதல்வியை அபிசீனிய அரசகுமாரனுக்கு மணம்செய்து கொடுத்து ஆப்பிரிக்காவில் இடமும் ஆதரவும் கௌரவமும் பெற்றுக்கொண்டது. அரசியல்வாதிகள் அபிசீனிய உறவு ஜப்பானை மிகமிக உயர்த்திவிடக் கூடுமோவென்று பயப்படுகின்றனர். அது ஒருபாலிருக்க, அண்மையில் கிடைத்த செய்தியால் ஜப்பானியர் துருக்கியின் எஃகு மனிதனான கமாலின் நட்பைப் பெற்றிருக்கின்றார்களென்று தெரிகிறது. துருக்கி பத்துக் கப்பல்கட்கு ஜப்பானிடம் "ஆர்டர்" கொடுத்திருக்கிறதாம். அதற்குப் பதிலாக ஜப்பானியர் பணம் வாங்கிக் கொள்ளப் போவதில்லையாம். ஆனால் ஜப்பான் தம் நெசவுத் தொழிற்சாலைகளைத் துருக்கியில் நிறுவித் துணிசெய்து ஐரோப்பாவுக்கு அனுப்பும் அனுமதியைப் பெறுமாம். கமால் அவ்வாறு செய்யப்படும் துணிகளில் 'துருக்கியிலாக்கப்பட்டது' என்றெழுத வேண்டுமென்று கேட்டிருக்கிறார். இந்தத் துருக்கி யுறவினால் ஜப்பான், வியாபாரத்தையேயன்றி யுத்தம், கீழ்நாட்டு ஐக்கியம், இயந்திர வளர்ச்சி முதலிய பல நன்மைகளை அடையலாம். மேனாட்டுத் தேசங்கள் இனி என்ன சூழ்ச்சிகள் செய்யத் தலைப்படுமோ?

---

### எல்லைப்புற அபேட்சகர்

#### டாக்டர் கான் சாகிப்பிடம் தூது

இந்தியா சட்டசபைக்கு, செந்தொண்டர் அபேட்சகரை நியமிப்பது விஷயமாகத் தீர்மானிப்பதற்காக எல்லைப்புற பிரபல காங்கிரஸ்காரர்களான ஸ்ரீமான்கள் சைதுல்லாகான் (டாக்டர் கான் சாகிப்பின் புதல்வர்), குலாம் முகமது, ராமசிங், சார்பார்ஸ் இவர்கள் டாக்டர் கான் சாகிப்பைக் கண்டு பேசுவதற்காக பெஷாவாரை விட்டுப் புறப்பட்டிருக்கிறார்கள்.

அன்பர்களே!

இந்தியச் சட்டசபைத் தேர்தல் சமீபித்துவிட்டது. நீங்கள் யாருக்கு வோட்டுப் போடப்போகிறீர்கள்?

"சந்தேகமென்ன? காங்கிரஸ்காரருக்கே"

என்று சொல்லுங்கள்.



# மதிப்புரை.

### இஸ்லாத்தில் ஸ்திரீகளின் உன்னதம்

[ஆசிரியர்: திரு. S. புருஹானுத்தீன். விலை அணா 3. கிடைக்குமிடங்கள்: திருவாரூர் விஜயபுரம் கலாரஞ்சிதம் புத்தகசாலை, சென்னை தாருல் இஸ்லாம் ஆபீஸ், நாச்சியார் கோவில் மஜீத் மான்ஷன்]

இப்புத்தகம் இஸ்லாத்தில் மாதர்கட்கு எவ்வளவு உயர்வளிக்கப்பட்டிருக்கின்றதென்பதைக் காண்பிக்கும் நோக்கத்தோடு எழுதப்பட்டிருக்கின்றது. ஆசிரியர் தம் கொள்கையை நிலைநாட்டு முன்பு பல தேசங்களில் பெண்கள் எவ்வாறு மதிக்கப்பட்டு வந்தார்கள் என்பதை எடுத்துக் காண்பிக்கின்றார். புத்தகம் முழுதிலும் ஆசிரியரின் மத அபிமானம் தொனிப்பது வெளிப்படை. சுமார் 50 பக்கங்கள் கொண்ட இப்புத்தகம் இயன்றவரை நல்ல தமிழில் எழுதப்பட்டு பெதர்வெயிட் என்ற நல்ல காகிதத்தில் அழகாக அச்சிடப்பட்டிருக்கின்றதென்பது குறிப்பிடத்தக்கது.

### திருவாங்கூர் இளவரசர் ஸ்ரீசித்திரைத் திருநாள்

[நூலாசிரியர்: திரு. டி. ராமலிங்கம் பிள்ளை எம். எ. விலை: அணா 8. கிடைக்குமிடம்: ஆர். எஸ். பிள்ளை, காந்தாரி அம்மன் கோவில் தெரு, திருவனந்தபுரம்.]

இப்புத்தகம், தற்போது திருவாங்கூரை ஆட்சிபுரிந்துவரும் இளவரசர் ஸ்ரீசித்திரை திருநாள் அவர்களின் சரித்திரமாகும். நூலாசிரியர் ஆதியில் திருவாங்கூரின் பூமி சாஸ்திரச் சிறப்பையும், அப்பால் திருவாங்கோட்டு அரச குடும்பத்தின் தொன்மை, பண்டை சரித்திரச் சுருக்கம் முதலியவற்றையும் எடுத்துக் கூறி, அப்பால் ஸ்ரீசித்திரைத்திருநாளின் சரித்திரத்தை விளக்கு முகத்தான் அவர் காலத்தில் நிகழ்ந்த சீர்திருத்தங்களையும் அரசியல் மாற்றங்களையும் ஆராய்கின்றார். ஸ்ரீ. சித்திரைத் திருநாள் "பட்டம் பெற்று" இரண்டு வருடங்களே ஆயினவெனினும், மிகத்திறமையாக அரசாங்க விஷயத்தில் நடந்திருக்கிறார் என்பதை நிரூபிக்க ஆசிரியர் முயல்கின்றார். நூல் முழுதும் 'அரசர் மகாவிஷ்ணுவின் அவதாரம்' என்ற எண்ணத்துடன் எழுதப்பட்டிருப்பதாக யூகிக்க இடமிருக்கிறது. சுமார் 100 பக்கங்கள் கொண்ட இந்நூல் நல்ல தமிழில் ஆக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தகுந்ததாகும்.

### கண்கண்ட தெய்வங்கள் & C

[இயற்றியவர்: திரு. T. S. ஸ்ரீபால். கிடைக்குமிடம்: தென்னிந்திய ஜீவரட்சா பிரசார சபை, 436, தங்கசாலை வீதி, சென்னை]

கண்கண்ட தெய்வங்கள் கருணையுடன் காத்துவா, காணாத தெய்வங்கள் கழுத்தறுக்கச் சொல்லினவா, கிள்ளை விடுதூது என்ற இருபகுதிகளை யுடைய இப்புத்தகம் மக்கள் பிராணிகள் மீது கொள்ளவேண்டிய அன்பை வற்புறுத்து முறையில் தெளிந்த பாஷையில் எழுதப்பட்டிருக்கிறது. புத்தகத்தின் முற்பகுதி, பூமி, காற்று, அக்னி முதலிய இயற்கைத் தெய்வங்கள் மனிதர்கட்கு எவ்வாறு நன்மை செய்கின்றனவோ, அவ்வாறே இதர ஜீவர்கட்கும் நன்மை செய்கின்றனவென்றும், ஆதலால் அத்தெய்வங்கள் மனிதன் வேறு மற்ற பிராணிகள் வேறு என்ற வித்தியாசத்தைக் காண்பிக்கவில்லை யென்றும் விளக்கி மக்களை ஜீவகாருண்யம் கொள்ளுமாறு தூண்டுகின்றது. அப்பால் உயிர்ப் பலி கேட்கும் சிறு தேவதைகளின் உற்பத்தியும் அதற்கு மக்கள் காண்பிக்கும் சலுகையின் அர்த்தமின்மையும் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. பிறகு ஆசிரியர் அஹிம்சா தர்மத்தின் சிறப்பை விரிவாக எடுத்துக் கூறுகிறார்.

இந்நூலின் பிற்பகுதியாகிய கிள்ளை விடு தூதில், பல மிருகங்கள் ஒரு கிளியிடம் தங்கட்கு மனிதர் காண்பிக்கும் கொடுமையை எடுத்துக் கூறிப் பிரம்மனிடம் இனிமேல் தங்களைப் படைக்க வேண்டாமென்று கூறி விடுமாறு கேட்டுக்கொள்வதாகச் சித்திரிக்கப் பட்டிருக்கிறது. பொதுவாக இந்நூலைப் படிப்போர் ஜீவகாருண்ய முடையவர்களாகி விட வழியுண்டு. கிரௌன் 1X8 அளவில் அமைந்த இப்புத்தகம் 16 பக்கங்களையுடையது. வேண்டுவோர் பிரசுரகார்கட்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.



# புராண விநோதம்

(வைசம்பாயனன்)

மதுரையிலே குலோத்துங்க பாண்டியன் என்று ஒரு அரசன் இருந்தானும். அவனுக்குப் பதினுயிரம் மனைவிமார் இருந்தார்களாம். ஒவ்வொரு மனைவிக்கும் அவ்வாறு குழந்தைகளாக அறுபதினுயிரம் ஆண் குழந்தைகள் பிறந்தனவாம். பாருங்கள்! ஒரு மனுஷன் பதினுயிரம் மனைவிகளை எப்படி மணக்க முடியும்? என்னவோ மணந்துகொண்டான் என்றாலும், ஒவ்வொரு மனைவிக்கும் ஆறு ஆறு குழந்தைகள் வீதம் எப்படி ஐயா! எல்லாம் ஆண் குழந்தைகளாக அறுபதினுயிரம் பிள்ளைகள் பிறந்திருக்கும்? மருந்துக்குக்கூடப் பெண் குழந்தை ஒன்றாவது பிறக்கக்கூடாதா? அறுபதினுயிரம் பேருக்கும் கல்யாணம் ஆகி வீடு வாசல்கள் குழந்தை குட்டிகள் பெருகினல் அடே அப்பா! பாண்டிய வம்சம் எவ்வளவோ பெருகியிருக்குமே.

* * *

திருவிளையாடற் புராணத்திலே, தடாதகைப் பிராட்டிக்கும் சோமசுந்தரக் கடவுளுக்கும் மதுரையிலே கல்யாணம் நடந்த கதை கேட்டிருப்பீர்கள். அதிலே ஒரு விநோதம் இருக்கிறது! அது என்ன? கல்யாணத்திலே வந்தவர்களெல்லாம் சாப்பிட்டார்கள். ஆனுல் சமைத்த பதார்த்தங்களெல்லாம் நிரம்ப மிச்சமாகக் கிடந்தன. உடனே அவைகளைச் சாப்பிட்டுத் தீர்ப்பதற்காகக் குண்டோதரன் என்ற பூதத்துக்கு மாப்பிள்ளை ஆர்டர் கொடுத்து விட்டார். அவ்வளவுதான்! கிளம்பிவிட்டான் குண்டோதரன்! வெந்தபதார்த்தங்களையெல்லாம் சரிப்படுத்தி விட்டான்! பசி அடங்கவில்லை! பிறகு வேகாத பதார்த்தங்கள் அரிசி பருப்பு உப்பு மிளகாய் எல்லாவற்றையும் அப்படியே விழுங்கினுன்! நல்லவேளையாக ஆட்களைவிழுங்க நினைக்கவில்லை. இத்தனையும் விழுங்கித் தொலைத்தும் பசி அடங்கினபாடில்லை! கடைசியாக அன்னக்குழி வரவழைக்கப் பட்டது. அதைச் சாப்பிட்டவுடனே ஒருவாறு பசி அடங்கிவிட்டது! இத்தனையும் கபளீகரம் பண்ணின குண்டோதரனுக்குத் தண்ணீர்த் தாகம் எடுத்து விட்டது! செப்பு, குடம், அண்டா, கிணறு, குளம் முதலியவைகளிலிருந்து தண்ணீர் எடுத்துச் சாப்பிட்டால் தாகம் நிற்குமா? அதற்காகத்தான் வைகை நதியைக் கடவுள் வரவழைத்தார். அப்படியே வாயை அங்காந்து மீன் தவளை முதலிய சகல நீர்வாழ் பிராணிகளும் வாயுக்குள் புகும்படியாகத் தண்ணீரைக் குடித்துத் தாக சாந்தி செய்து கொண்டான்! நல்ல வேளை! இப்போது அந்த ஆசாமி இருந்தால் நமது நாட்டிலே கொஞ்சம் கொஞ்சம் இருக்கிற அரிசி வகையறுவுக்கும் தண்ணீருக்கும்கூட ஆபத்துத் தான்!

* * *.

அகஸ்தியரைப் பற்றி எல்லோருக்கும் தெரியுமே. அவர் கடல் நீரையே உள்ளங்கையில் அடக்கி ஆசமனம் செய்து விட்டாராம்! அப்படியானுல் அவர் கை எவ்வளவு பெரிதாய் இருந்திருக்க வேண்டும்! அவர் வயிறு எவ்வளவு பெரிது இருந்திருக்க வேண்டும்!

## சிறைக் கறுப்புக் குல்லாய்

அடுத்த பக்கத்தே வெளியாகி யிருக்கும் தாண்டகத்தின் ஏழாவது பாட்டில் 'சிறைக் கறுப்புக் குல்லாய்' என்று காணப்படுவதன் பொருள் சிறை சென்ற கைதிகளுக்கும் அவர் வாயிலாகக்கேட்டறிந்தவர்கட்கும்தவிர, வேறு எந்தப் பெரிய புலவருக்கும் தெரியாதாகலின் அதைச் சிறிது விளக்க வேண்டுவது அவசியம். சிறையில் கைதிகளுக்கெல்லாம் குல்லாப் போடுவது வழக்கம். குல்லாய்கள் பல நிறத்தில் உள. ஒவ்வொன்றும் ஒவ்வொரு அடையாளம். ஜென்மத் தீர்ப்பு விதிக்கப் பெற்றவர்க்குச் சிகப்புக் குல்லாய். சாதாரணமான கைதிகட்கு வெள்ளைக் குல்லாய். சிறை செல்வதே தொழிலாக உடைய கைதிகட்குக் கறுப்புக் குல்லாய்கள். கறுப்புக் குல்லாய்க்காரரைச் 'சிறைப் பறவை' என்று கூறுவது வழக்கம். அம்முறை பற்றிச் சிறை செல்வதே தொழிலாக உடைமை கருதி வேடிக்கையாக 'சிறைக் கறுப்புக் குல்லாய்' எனக் காந்தியடிகள் ஈண்டுக் கூறப்படுகிறார்.

'ஆசிரியர் ஊழியன்'

---

## தமிழ் மாகாண மகாநாடு ஒத்தி வைக்கப்பட்டது

தமிழ் மாகாண மகா நாட்டின் வரவேற்புக் கமிட்டி விண்ணப்பித்துக் கொண்டதை முன்னிட்டு, மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் மகா நாட்டை இம்மாதம் 29, 30 தேதிகளுக்கு ஒத்தி வைத்தார். அம் மகாநாட்டோடு 16-ந் தேதி கோயம்புத்தூரில் நடத்த ஏற்பாடு செய்திருந்த காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தையும் ஒத்தி வைத்தனர்.

---

## பர்மாவில் தனவணிகர் சீர்திருத்த மணம்

பசுமந்தானில், திரு. RM. S. RM. ராமசாமி செட்டியார், தேவகோட்டை K. N. RM. கண்ணப்ப செட்டியாரின் புதல்வியாகிய ஸ்ரீமதி விசாலாட்சியை புரோகிதமின்றி செப்டம்பர் 11-ந் தேதி மணந்துகொண்டார் என்று தெரிகிறது.



# ஏர்வாடாக் கோவில்

ராய. சோ.

## திருத்தாண்டகம்

"கள்ளி முதுகாட்டில்" என்னும் அப்பர் தாண்டகப் பாவைப் பின்பற்றியது.

2—9—32ல் வேலூர்ச் சிறையில் பாடப்பட்டது.

(உரிமை ஆக்கியோனுடையது)

பாரதத்தாய் அருமந்த பாலன் கண்டாய்!
பண்டைவாழ் வவள்பெறற்குப் பகரொணுதை!
ஆரஞரே இன்பமென அடைந்தான் கண்டாய்!
அவனியெலாம் நனிவாழ அருள்வான் கண்டாய்!
பேரறிவு படைத்தனிப் பெரியோன் கண்டாய்!
பிறர்க்கெனவே வாழுபெருந் தகையோன் கண்டாய்!
ஏருழவே என்தொழிலென் றிசைப்பான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (க)

புத்திரிபாய் பெற்றெடுத்த புனிதன் கண்டாய்!
போர்ப்பந்தர் பிறந்தருளும் புகழோன் கண்டாய்!
மெத்துபுகழ்ச் சபர்மதியில் மேயோன் கண்டாய்!
வேற்றரசை வேர்கல்ல வல்லோன் கண்டாய்!
வித்தகர்க்கெல் லாந்தலைமை பூண்டான் கண்டாய்!
மெய்த்திருவா வெந்துயரே கொண்டான் கண்டாய்!
எத்தரையும் ஈடெவரும் இல்லான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (உ)

மாதவத்துக் கஸ்தூரி மணாளன் கண்டாய்!
மாண்டகுணம் அத்துணையும் வாய்ந்தான் கண்டாய்!
தீதுபுரி மாக்களுமே திருந்த நீதிச்
சீரறத்தை உலகறியச் செய்வான் கண்டாய்!
போதம்வளர் புந்தியினர்க் கணியன் கண்டாய்!
பொல்லாத மாந்தர்க்குச் சேயான் கண்டாய்!
ஏதருமை என்னவினை செய்வான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (ங)

சொல்லாருஞ் செம்மேனித் தோன்றல் கண்டாய்!
சுக்கிலவில் புரட்டாதி பதினெட் டாநாள்
எல்லாரும் இன்படையப் பிறந்தான் கண்டாய்!
என்னனையார் இடர்களைந்தே எடுத்தாட் கொண்ட
நல்லார்கள் தினம்வணங்கும் நம்பன் கண்டாய்!
நற்றவத்தால் அவனையடை பேறு பெற்ற
இல்லாரும் கஸ்தூரி தோழன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (ச)

மக்களன்று வகுத்தபல சமய பேத
மாக்கடலை நனிதுருவி; மணியே போன்ற
மிக்கசெயற் போறத்தை உலகம் ஏற்க
விரித்துரைக்கும் மேதகைகொள் ஞானி கண்டாய்!
பக்கமுளார் இவனின்ன மதத்தான் என்று
பளிச்சென்று காண்பதற்குப் புறத்தே தீட்டும்
எக்குறியும் திருநெற்றி யிடாதான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (ரு)

மன்னவர்க்கும் அஞ்சாத வலியோன் கண்டாய்!
மகாத்மனெனும் புகழ்பூண்ட வள்ளல் கண்டாய்!
அன்னைதிருப் பணியேற்ற அதனுல் ஐயோ!
அருள்வடிவத் திருமேனி எழில்வ ருந்தப்
பன்னரிய துன்பமெலாம் வலிய ஏற்றுப்
பன்னெடுநாட் சிறையிருந்த பாமன் கண்டாய்!
என்னுளத்தே குடியேறி யிருந்தான் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (சு)

ஓங்குகடல் உலகிலுள உயர்ந்தோர் எல்லாம்
உலகினுக்கே ஒருவனிவன் என்னும் மேன்மைப்
பாங்கதனைப் படைத்திட்டோன் கண்டாய்! ஆனுல்;
பாரினுயர் நாகரிகர் தாமே என்னும்
ஆங்கிலத்தார் அரசதனில் குற்றம் செய்யும்
அவருறையும் சிறைக்கறுப்புக் குல்லாய் கண்டாய்!
ஏங்குகின்ற ஏழையர்பங் காளன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (எ)

உள்ளத்தாற் பொய்யாதே ஒழுகி ஒரும்
உலகறிஞர் உள்ளமெலாம் உள்ளான் கண்டாய்!
கள்ளத்தார் காணரிய கடலான் கண்டாய்!
கருதரிய பெருங்குணத்துக் காந்தி கண்டாய்!
பள்ளத்தே பாய்நீர்போல் அறத்தை இந்தப்
படிநிறையப் பாய்ச்சுவோன் கண்டாய்! பாபம்
எள்ளத்தீ வினையறுக்கும் ஏந்தல் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (அ)

தென்னுப்பி ரிக்காவில் உரிமைக் காகச்
சிறையிருந்தான்! பல்லுடையும் பட்டான் கண்டாய்!
அந்நாளில் எங்களருந் தமிழர் செய்த
அரியபணி ஏற்றருளும் அண்ணல் கண்டாய்!
ஒன்னார்கள் கண்டஞ்சும் ஒற்றைக் கத்தர்
உடுத்தாடை பலசுமக்கும் ஓரார் நாட்டும்
எல்நாட்டி மீண்டபெரும் எழிலோன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (கூ)

நமையடக்க இராணுவமே துணையாக் கொண்ட
நம்நலமே நாடிநமை ஆள்வோர் என்போர்
தமையுடைக்கச் சத்தியமே படையாக் கொண்டு
தனிப்பெரிய போர்வகுத்த தக்கோன் கண்டாய்!
நமைப்புரக்கும் மோகனப்பேர் நல்லோன் கண்டாய்!
நற்பொருளெ லாமொன்றாத் திரண்டான் கண்டாய்!
இமயமுதல் குமரிக்கோர் மன்னன் கண்டாய்!
ஏர்வாடாக் கோவிலுறை எம்மான் தானே! (க0)

# ஹரிஜனச் சங்கம்---ஓர் பிராயச்சித்த இயக்கம்

## “ஹரிஜனர்கட்கு அதில் இடமில்லை”

### மகாத்மா காந்தியின் கருத்து

பூனா பொதுஜன ஊழியரான ஸ்ரீ P. N. ராஜபோஜர் காந்திஜிக்கு ஓர் கடிதமெழுதி ஏராளமான புகார்களையும் திருத்தங்களையும் தெரிவித்தார். அவற்றின் சுருக்கம் :—

(1) ஹரிஜனச் சங்கத்தின் நிர்வாகச் சபையில் எத்தனை ஹரிஜனரல்லாதாரிருக்கின்றார்களோ அத்தனை ஹரிஜனர்களுமிருக்க வேண்டும்.

(2) ஹரிஜன நிதி எவ்வெவ் வழியில் செலவிடப்பட்டதென்கின்ற விவரம் பிரசுரிக்கப் படவேண்டும்.

(3) ஹரிஜனர்கள் கிணறுகளை உபயோகிக்கும் உரிமையைப் பெறுதல், தர்மசாலைகளை உபயோகித்துக் கொள்ளும் வசதியை அடைதல், இதர ஜாதி இந்துக்களோடொப்ப வியாபாரம் முதலிய தொழில்களை நடாத்துதல் ஆகிய சௌகரியங்களை எய்துமாறு தகுந்த வழிகளில், சங்கம் தனது பொருளையும் செல்வாக்கையும் பயன்படுத்த வேண்டும்.

(4) சுதந்திரமான பல ஹரிஜனச் சபைகட்கு ஹரிஜனச் சங்கத்திலிருந்து ஆதரவோ உதவியோ கிடைப்பதில்லை.

(5) மஹாராஷ்டிர ஹரிஜனப் போர்டு முற்றிலும் பிராமணர்களாலேயே நிர்வகிக்கப்படுகிறது. ஆனால் அதிலுள்ள பல பதவிகட்கு ஹரிஜனர்களைப்போட முடியும்.

### காந்திஜீ கடிதம்

இந்த ராஜபோஜர் கடிதத்திற்குக் காந்திஜீ எழுதிய பதிலாவது :—

“ தங்களது ஆகஸ்டு 25-ந் தேதிக் கடிதம் கண்டு வியப்புற்றேன். நீங்கள் ஹரிஜனச் சேவகச் சங்கத்தைப்பற்றி, கொண்டிருக்கும் அபிப்பிராயம், என்னோடு பேசிய காலையிலும் எனக்குக் கடிதங்களெழுதிய காலையிலும் கொண்டிருந்த கருத்திலிருந்து மிகவும் மாறுபட்டிருக்கின்றது. ஒருகால் காலப் போக்கில் அநுபவ மாறுபாட்டால் அபிப்பிராயம் மாறியிருக்கலாம். அது உண்மையானால், நீங்கள் அபூரணமான ஆதாரங்களின்மேல் உங்கள் குறைகளை நாட்டியிருக்கின்றீர்களென்று மட்டிலும் கூற விரும்புகிறேன்.



லேடி வில்லிங்டன் காலேஜின் சமீபம் எற்பட்டிருக்கும்செம்படவர்கள் விடுதியில் ஒரு பொது மண்டம் திறந்து வைக்கப்பட்டது. ஸ்ரீமதி ஜீ. விசாலாட்சி அம்மாள் திறப்பு விழாவை ஆற்றினர். அதுபோது ஸ்ரீராமர் படமொன்றையும் திறந்து வைத்தார். —P. P. B.

“நான் பன்முறை ஹரிஜனச் சேவகச் சங்கம் ஒரு பிராயச்சித்த இயக்கமென்று கூறியிருப்பதை நீங்கள் அறிவீர்கள். ஆதலால் அச்சங்கத்தை ஹரிஜனர்கள் முதன்மை பெற்று நடாத்த முடியாது. ஜாதி இந்துக்கள் பிராயச் சித்தத்தை எவ்வெவ் வழியில் செய்ய வேண்டுமென்று நினைக்கின்றார்களோ அதற்கேற்றபடியே சங்கம் நடந்து கொள்ளும். அம்முறைகள் ஹரிஜனர்கட்குப் பிடிக்கவில்லையானால் சந்தேகமற அதுவோர் துரதிருஷ்டந்தான். அப்படியானால் பிராயச் சித்தம் செய்வோர் மீண்டும் முயற்சியி லீடுபட வேண்டும். ஆனால் ஜாதி இந்துக்கள் பிராயச் சித்தக் கலையைக் கடுமையான செயல்களி லிருந்தே கற்றுக்கொள்ள வேண்டியவர்களா யிருக்கின்றார்களென்பது வெளிப்படை.

“நான் உங்களிடம் நேரில் கூறிய வண்ணமும் நீங்கள் ஒத்துக் கொள்வதாகச் சொன்னமாதிரியும் ஹரிஜனச் சேவகச் சங்கத்தின் கொள்கைகளை ஒழுங்குபண்ணுவதற் கேற்றமுறை ஆங்காங்கு ஹரிஜனர்கள் ஆலோசனைச் சபைகளமைத்து, நல்ல நோக்கத்துடன் அந்தந்தச் சபைகளின் வேலைத் திட்டங்களை ஆராய்ந்தறிந்து, குறைகளிருந்தால் எடுத்துக் காண்பித்து, தகுந்த ஆலோசனைகள் கூறி, உழைக்க வேண்டுவதேயாகும். இங்ஙனம் எங்கும் ஆலோசனைச் சபைகள் அமைக்கப்பட்டால் இயற்கையாகவே ஹரிஜனச் சங்கம் இன்று செய்வதைவிட மிக நல்ல வேலை செய்யா நிற்கும். இந்த நிலைமையில், போர்டு அவமானமடையத் தகுந்ததா யெதுவுமில்லை.



நீங்கள் ஹரிஜன் பத்திரிகையை வாராவாரம் தவறாது படித்துக் கொண்டிருந்தால் இந்தியா முழுதும் ஹரிஜனநிதி எவ்வாறு உபயோகிக்கப் படுகின்றதென்பதை நன்கறிவீர்கள். பல தஸ்தாவேஜுகளால், ஹரிஜனர்கள் நிர்வகிக்கின்ற பல ஸ்தாபனங்கட்குச் சங்கநிதி உதவி செய்கின்றதென்பதை நிரூபிக்க முடியும். மேலும் ஆராய்ந்து பார்த்தால் ஹரிஜனர்கட்கும் ஹரிஜன ஸ்தாபனங்கட்கும் செய்யப் பெறும் உதவி தினே தினே வளர்ந்து கொண்டிருக்கின்றதென்பதையும் தெரிந்துக் கொள்வீர்கள். கூடிய வரையிலும் ஹரிஜனர்கட்குள் பாரபட்சமின்றிப் பணம் செலவிடப்படுகின்றது.

“செலவு செய்யப்படும் பணத்தின் கணக்கு வெளியிடப்படவில்லை யென்று நீங்கள் நினைப்பது தவறு. மாகாணக் கிளைகளிலிருந்து அவ்வப்போது கணக்குகள் வெளியிடப்படுகின்றன. அவற்றைப் பொதுஜனங்களால் பரிசோதிக்க முடியும். நான் கூறுவதின் உண்மையைப் பரிசோதிக்க வேண்டுமானால் ஹரிஜன் பத்திரிகையைப் பார்ப்பது நலம்; இன்றேல் மாகாணக் கிளைகட்கெழுதினால் நகல்கள் கிடைக்கக்கூடும். நான் தாக்கர் பாபாவிடத்தில் ஒரு மொத்தக்கணக்கை (ஹரிஜனில் வெளியிடுவதற்காக)க் கேட்டிருக்கின்றேன். அதனைப் பார்த்தால் ஹரிஜன மாணவர்கட்காகவும் ஹரிஜன ஸ்தாபனங்கட்காகவும் எவ்வளவு பெரிய தொகை செலவிடப் பட்டிருக்கின்றதென்று நீங்களே ஆச்சரியப்பட்டுவிடுவீர்கள்.

“ஆலயப் பிரவேசத்தைப் பொறுத்த வரையிலும், ஹரிஜன நிதியில் ஒரு பகுதியேனும் ஆலயங்கள் திறக்கும் முயற்சியிலே, ஆலயம் கட்டும் வகையிலோ செலவிடப் படவில்லை யென்றும், எனது ஒன்பது மாதச் சுற்றுப் பிரயாணத்திலும் என் பிரசங்கங்களைக் கவனித்தால் ஆலய நுழைவு மிக அற்பமாகவே கணிக்கப்பட்டிருக்கிறதென்றும் காண்பீர்கள். நீங்கள் குறிப்பிடுகின்ற மாதிரியே ஹரிஜனச் சேவகச் சங்கம் கவனம் செலுத்தி வருகிறது. அது நீங்கள் குறிப்பிடுகின்ற எல்லா முயற்சிகளிலும் ஈடுபடவில்லையானால், அதற்குக் காரணம் எல்லாவற்றையும் ஒன்றாகச் செய்யப் போதிய அவகாசமின்மையாகவே இருக்கவேண்டும்.

“மகாராஷ்டிர ஹரிஜன் போர்ட்டை நீங்கள் தாக்குவது அவ்வளவு ஏற்றுக் கொள்ளத் தகுந்ததல்ல. ஹரிஜன இயக்கத்தின் பெரிய தூணாகிய திரு. தேவதார்தான் அம்மாகாணப் போர்டின் தலைவர். அவர் தம் ஊழியத்தை இப்போர்டு ஏற்படுதற்குப் பல ஆண்டுகட்கு முன்னமே தொடங்கி விட்டார். ஒருகால் நம்மில் பலர் பிறப்பதற்கு முன்னிருந்தே ஹரிஜனச் சேவை செய்து வருகின்றார் என்றாலும் தகும். எனக்குத் தெரிந்த வரையிலும் அவரது சீர்திருத்தத்தைப் பற்றி எவரும் குறை கூறவில்லை. நீங்கள் உள்ளூர்ச் சங்கத்தில் ஏதேனும் குறைகளைக் கண்டால் உடன் அவற்றை அச்சங்கத்தினிடமே கூறவும், அதற்கு அது செவி சாய்க்காமல் போனால் மத்திய போர்டுக்குச் சொல்லவும் செய்ய வேண்டுவது கடமையல்லவா? அவ்வாறு செய்தும் குறைகள் நிவர்த்திக்கப்படாமற் போனால் பொது ஜனங்கட்குப் போர்டைப் பற்றிக் கூறலாம். இப்போதிருக்கின்ற நிலைமையில் உங்கள் பிராதுகள் பல மற்றவையேயாம். எனது அபிப்பிராயத்தில் மகாராஷ்டிர போர்டு நன்கு மதிக்கப்படுகிறது”

(ஸ்ரீ மகாதேவ தேசாய் மேற்படிக் கடிதத்தை ஹரிஜனப் பத்திரிகைக்கு அனுப்பியுள்ளார்)



மைலாப்பூர் ரானடே மண்டபத்தில் காலஞ்சென்ற ‘ஹிந்து’ பத்திராதிபர் திரு. எ. ரங்கசாமி அய்யங்கார் அவர்கள் உருவப்படத்தை ஸர். அல்லாடி கிருஷ்ணசாமி அய்யங்கார் திறந்துவைத்தார். —P.P.B.

## திருநெல்லையாரும் தேர்தலும்

காரைக்குடி நமது நண்பர் உயர் திரு. தண்ணீர்மலையான் அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் திருமதி சுப. திருநெல்லை அவர்கள் காரைக்குடி நகரசபைத் தேர்தலுக்கு நிற்பது அனைவருக்கும் மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுக்கின்றது. நமது தனவணிக சமூகத்திலே ஓர் பெண் அங்கத்தினராக முயல்வது இதுவே முதன் முதலாகும். இம்முயற்சிக்கு ஆதரவளிக்கக் காரைக்குடி வாசிகள் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றார்கள். எனவே, திருநெல்லையார் அவர்கள் போட்டியன்னியில் தேர்ந் தெடுக்கப்படுவார்கள் ‘என நம்புகின்றேன்.

சோம இராமநாதன், கொழுப்பு.

# சமத்துவமும் சுதந்திரமும்

## ருஷ்யாவின் ஆதர்சம்

('மாஸ்கோ ந்யூஸ்' என்ற பத்திரிகையிலிருந்து)

"சமாதானம், உணவு, நிலம்" என்பதே போல்ஷிவிக் கட்சியினரின் கீதமாக இருந்து வந்தது. ஸோவியத் தொழிலாள—விவசாயத் திட்டத்தை ஸ்தாபிக்க ஏற்பட்ட அக்டோபர் புரட்சியில் இவைதான் ஒரு முக்கிய அம்சமாக இருந்தன. "உலகத்தார் யாவருக்கும் சமாதானம்" என்பது தான் அவர்கள் இலக்ஷியம். இதில் அதிசயம் ஒன்றுமில்லை. லெனினுடைய தலைமையின் கீழும், ஸ்டாலின் தலைமையின் கீழும், யுத்தத்தை எதிர்த்துப் போல்ஷவிக்குகள் பிரசாரம் செய்தார்கள். 1917 நவம்பர் 7-ந் தேதியில் நடந்த இரண்டாவது ஸோவியத் காங்கிரஸ், புரட்சி ஏற்பட்ட இரண்டாவது நாள் ஜனநாயக சமாதானத்திற்கு இடையூறாக நடக்கும் உலகயுத்தத்தை நிறுத்தி விடும்படி அறிக்கை வெளியிட்டார்கள்.

மே 1922ல் ஜினிவாவில் ஸோவியத் அரசாங்கம், எல்லோரும் ஆயுதப்பரிஹாரணம் செய்துவிட வேண்டுமென்றும் உலக சமாதானத்தை நிலைநாட்ட வேண்டுமென்றும் மற்ற உலக அரசியல்களை வேண்டிக் கொண்டது. லிட்வினுபின் ஆயுதப்பரிஹாரணப் பேச்சு, ஜினிவாவிற்கு ஸோவியத் பிரதிநிதிகள் சென்று நடத்திய உடன்படிக்கை, இவைகளுக்கு எல்லாம் ஸோவியத்தின் சமாதானக் கொள்கைதான் காரணம்.

### சமாதானம் எதற்கு ?

இன்னும் ஸோவியத்தைப் பற்றிக் குறை கூறிக்கொண்டிருப்பது ஓயவில்லை. ஏன் ஸோவியத் அரசியல் சமாதானத்தை நாடுகிறது என்று கேட்கிறார்கள். ஸோவியத் வலிமையை இழந்து விட்டதால் சமாதானத்தை நாடுகிறது என்று சொல்லும் எதிரிகளின் காலம் கடந்து விட்டது. ஆனால் இதையும் நம்புவதற்கு ஆட்கள் இருந்து வருகிறார்கள். சமாதான ஆசைக்குக் காரணந்தான் என்ன? போல்ஷவிக் சமுதாயத்தில் இருக்கும் தொழிலாளிகளின் நிலைமையை நன்றாய் நிதானித்துக் கொண்டால் இதற்குப் பதில் அளித்து விடலாம். ருஷ்யத் தொழிலாளிகளின் முக்கியதத்துவம் சமாதானம். அதனுடைய முன்னணியான பொதுவுடைமைக் கட்சியும் அதை ஆதரிக்கிறது.

தொழிலாளிகள், வகுப்புப்பிரிவுகளும் ஏமாற்றிக் கொள்ளையடிக்கும் சிலர்களும் அல்லாத ஒரு சமுதாயத்தைச் சிருஷ்டிக்க முனைந்து நிற்கிறார்கள். இதற்குப் பழைய பூர்ஜியாஸ் சமூக அமைப்பைத் தொலைக்க வேண்டியது அவசியம். இதற்கு ஜனங்களுக்குப் போதிக்க வேண்டியிருக்கிறது, சமூகத்தைத் திருத்தியமைக்க வேண்டியிருக்கிறது, புதிய விஷயங்களைக் கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது. இந்த வேலையில் தான் ஸோவியத் யூனியன் முனைந்து நிற்கிறது. முதலாவது இரண்டாவது ஐந்து வருஷத் திட்டங்களினால் இதை நிறைவேற்ற முயலுகிறது.

இந்த மாதிரியான வேலையில் யுத்தத்திற்கு இடமே கிடையாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் இது வரை யுத்தத்தில் ஈடுபடாமல் இருந்ததினால்தான் அவர்களுடைய திட்டம் ஓரளவு வெற்றி பெற்றது. யுத்தம் இந்த இலட்சியத்தைத் தடை செய்யும். சாம்ராஜ்யப் பித்துக் கொண்ட முதலாளித்துவமும் அபேதவாதமும் எதிர் எதிராக யுத்த முனையில் நிற்க வேண்டி வந்தாலும் அதற்கு முதற் காரணம் தொழிலாளர் அரசியலாக இருக்காது.

இதனால் ஸோவியத் அரசாங்கம் வலியிழந்து பாதுகாப்பற்று இருக்கிறது என்று நினைத்து விடக்கூடாது. அபேதவாத அரசியலுக்கு ஏதாவது நேர்ந்தால் வெற்றி பெறக் கூடியதிறன் அதற்கு இருந்து வருகிறது. இது உலகமறிந்த உண்மை. ஸோவியத், ஏகாதிபத்தியப் பித்தால் புதிய நாடுகளைக் கைப்பற்ற ஆசைப்படவில்லை. உலக அரசியல்களுடன் வியாபார சம்பந்தமும் சிநேக பாவமும் வைத்துக் கொள்ளத்தான் ஆசைப்படுகிறது. இப்பொழுதும் உலக சமாதானத்திற்காகப் பாடுபட்டு வருகிறது.

"முதாலாளித்துவ அரசியல்களில் ஒவ்வொன்றும் புதிய யுத்தத்திற்குத் தயாராகிக் கொண்டு வருகின்றன. ஆனால் ஸோவியத் உலக சமாதானத்திற்குக் கஷ்டப்பட்டுப் போராடி வருகிறது" என்று ஸ்டாலின் 17வது கட்சிக் காங்கிரஸின் அறிக்கையில் கூறியிருக்கிறார். இதைப் பலர் ஒத்துக் கொள்ளுவார்கள்.




பிரிட்டனுக்குச் சொந்தமான "கொழும்பு" என்னும் கப்பல். தற்போது சென்னைத் துறைமுகத்தில் நிற்கிறது. —P. P. B.



# அவள் உத்தமி!

("அல்லி")

ராஜலக்ஷ்மி பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். ஐந்து சகோதரிகள். அவள் தகப்பனருக்குப் பிள்ளையே கிடையாது. ராமசாமி முதலியாருக்கு ராஜலக்ஷ்மி மிகவும் செல்லப்பெண். இவள் எது வேண்டுமென்று கேட்டாலும் முதலியார் இல்லையென்று சொன்னதே கிடையாது. ராஜலக்ஷ்மி சர்க்கார் உத்தியோகம் பண்ணிக்கொண்டிருந்த ராமச்சந்திரன் என்னும் வாலிபனுக்கு வாழ்க்கைப்பட்டாள். ராமசந்திரன் இயற்கையிலேயே நல்ல குணம் படைத்தவன்; அற்ப புத்தி இல்லாதவன். ராஜலக்ஷ்மியிடம் ராமச்சந்திரனுக்கு மிகவும் அன்பு. தம்பதிகள் இருவரும் நிரம்பவும் நேசத்துடன் வாழ்க்கையை நடத்தி வந்தனர்.

ராமச்சந்திரனிடம் குமரன் என்று ஒரு வேலைக்காரனிருந்தான். எஜமானுக்குப் பணிவிடை செய்வதில் அவனுக்குச் சலிப்பு என்பதே கிடையாது. நாய் போல் உழைப்பான். ராஜலக்ஷ்மியிடம் அஞ்சலை என்ற வோர் வேலைக்காரியிருந்தாள். குமரனுக்குத்தன் எஜமானிடம் எவ்வளவு விசுவாசமோ, அவ்வளவு விசுவாசம் அஞ்சலைக்கு ராஜலக்ஷ்மியிடம் உண்டு. புருஷன், மனைவி, இருவருக்கும் இம்மாதிரி மனமொத்த வேலைக்காரர்கள் அமைந்தது அவர்கள் அதிர்ஷ்டம்தான்.

* * *

ராமச்சந்திரன் வீட்டிற்கு அடிக்கடி அவன் நண்பர்கள் வருவதுண்டு. நண்பர்கள் யாராவது வந்தால் வீட்டில் கொம்மாளம்தான். ஒரு சமயம் இவனோடு பள்ளிக்கூடத்தில் படித்த நண்பன் ஒருவன் வந்திருந்தான். அவன் ஒருவாரம் தங்கிவிட்டுப் போய்விட்டான். அவன் போன மறுதினத்திலிருந்து ராமச்சந்திரன் ஏதோ மனோவியாகூல மடைந்தவன்போலக் காணப்பட்டான். சகஜமாய்ப் புன்சிரிப்புடன் விளங்கும் அவன் முகத்தில் கவலைக் குறிகள் தோன்றின. வீட்டிலும் சரிவரச் சாப்பிடுவதில்லை. ராஜலக்ஷ்மியுடனும் சரியாய்ப் பேசுவதில்லை. இந்நிலைமை ராஜத்துக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. ஒருவாரம் வரையில் பொறுத்துப் பார்த்தாள். அவளால் தாங்க முடியவில்லை.

ஒருநாள் இரவுச் சாப்பாடு முடிந்ததும், "என்ன! ஒரு மாதிரியாய் இருக்கிறீர்களே" என்று கேட்டாள். ராமச்சந்திரன் ஒன்றும் பதில் சொல்லாமல் எழுந்திருந்து போய்விட்டான். ராஜம் அநேகமுறை ராமச்சந்திரனோடு பேச யத்தனித்தாள். அவன் முகங் கொடுத்துப் பேசவில்லை.

* * *

ராமச்சந்திரன் வீட்டைச்சுற்றி ஓர் பெரிய தோட்டமிருந்தது. ஓர்நாள் மாலை 4-மணியிருக்கும். ராஜலக்ஷ்மி தோட்டத்தில் உட்கார்ந்து கொண்டு ஏதோ வாசித்துக்கொண்டிருந்தாள். ராமச்சந்திரன் பின்புறமாக வந்து இவள் கண்களைப் பொத்தினான். ராஜம் நிமிர்ந்து பாராமலே இவன் கைகளைத் தொட்டு முத்தமிட்டுக் கொண்டாள். ராமச்சந்திரன் திடீரென்று கையை எடுத்துவிட்டு இவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

சிறிதுநேரம் மௌனம். "ராஜம்! நம் தோட்டத்திலுள்ள மாதுளம் பழங்களை யாரோ திருடிக்கொண்டு போகிறார்கள். இன்று இரவு இங்கு காவல் இருந்து திருடனைப் பிடிக்கலாமென்று நினைக்கிறேன். நீயும் என்னுடன் இரவு துணையாய் வருகிறாயா?" என்று கேட்டான்.

"இதற்காக நாம் காவல் இருப்பானேன்? குமரனிடம் சொன்னால் பார்த்துக் கொள்ளுகிறான்."

ராமச்சந்திரன் எனக்கென்னவோ அப்படித் தோன்றுகிறது. திருட்டுப் போவது என் சொத்து. திருடனைக் கண்டு பிடிக்கவேண்டியது என் கடமை. என் சொத்தை நான் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை யென்றால் அது அவமானமல்லவோ?

"நீங்கள் சொல்வது என்னவோ விசித்திரமாய்த் தானிருக்கிறது. இது வேலையாள் செய்யவேண்டிய காரியம் தானே?"

"அதெல்லாம் நான் கேட்கவில்லை. நீ வருகிறாயா இல்லையா? உனக்குப் பயமா யிருக்கிறதா?"

"எனக்கென்ன பயம்? கண்டிப்பாய் வரத்தான் வேண்டுமென்றால் வருகிறேன். இதில் பயம் என்ன?"

இரவு 9-மணிக்கு இருவரும் சாப்பிட்டு முடிந்தது. ராமச்சந்திரன் பெரிய தடி ஒன்றைக் கையிலெடுத்துக்கொண்டு ராஜத்தையும் அழைத்துக் கொண்டு தோட்டத்திற்குச் சென்றான். அங்கே இருந்த குடிசையில் இருவரும் உட்கார்ந்து கொண்டனர். இரவு மணி 11 ஆகி விட்டது. ஒருவரும் வரவில்லை.

"எவ்வளவு நேரம் இப்படி உட்கார்ந்து கொண்டிருப்பதாக உத்தேசம். எனக்குத் தூக்கம் வருகிறதே" என்றாள் ராஜலக்ஷ்மி.

"தூக்கமா வருகிறது! நீலி! உனக்குத் தூக்கம் வேறு!"

ராஜத்திற்கு ஒன்றும் புரியவில்லை.

"நான் உன்னை நம்பியிருந்தேனே. என்னை மோசம் செய்தாயே சண்டாளி! அன்று என் பள்ளிக்கூட நண்பன் ஒருவன் வந்திருந்தானே. பாமசாது. அவனை நீயல்லவா மயக்கிவிட்டாய். எனக்குத் தெரியாமலே போய் விடும் என்று எண்ணிக் கொண்டாயா? இவ்வொரு வாரமாய் நானும் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். சரியாக இரவு 12 மணிக்கு உன் அறைப் பக்கம் காலடிச் சப்தம் கேட்கிறது. இன்று உண்மை வெளியாகி விடும்" என்று ராமச்சந்திரன் சரமாரியாகப் பொழிந்தான். ராஜத்திற்கு இன்னது சொல்வதென்றே புரியவில்லை. நேரமோ இரவு 11 மணி. தனித்த இடம். ராமச்சந்திரன் ரௌத்திராகாரமாய் உட்கார்ந்திருக்கிறான். கையில் பெரியதடி ஒன்றிருக்கிறது. ராஜத்துக்கு என்னவோ சொல்ல முடியாதபடி ஓர் பயங்கர உணர்ச்சி தோன்றிற்று. தான் குற்றவாளி யல்லவென்று சொன்னதால் ராமச்சந்திரன் அப்போதிருந்த நிலைமையில் நம்பப் போவதில்லை. என்ன செய்வாள்? பாவம்! நடுநடுங்கிக் கொண்டே உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். ராமச்சந்திரன் ஏதேதோ சொல்லிக் கொண்டிருக்கிறான்.

"பாதகி! நான் உனக்கென்ன துரோகம் செய்தேன்? உன் மன

க்கு விரோதமாக ஏதாவது நான் செய்திருக்கிறேனா? நீ வாயால் சொல்லுவதற்கு முன் ஒவ்வொன்றிலும் நான் உன்னைத் திருப்திசெய்து வந்திருக்கின்றேனே? உனக்கு ஏன் இப்புத்தி வந்தது? இருக்கட்டும். உன்னைச் சொல்லியும் பயனில்லை. உன் பேச்சிற்கிணங்கினனே அம்மடையன்! நண்பன் என்பதையும் மறந்த கிராதகன். உன் கண் முன்னாலேயே அவனைச் சிதற அடிக்கிறேன் பார். எந்த முகத்திற்காக நீ ஆசை கொண்டாயோ, அதே முகத்தை உருத்தெரிய வொட்டாமல் குலைக்கிறேன். அன்று அவனது சரீரம் உனக்கின்ப மளித்தது. இன்று அவன் சவம் உன் கண்முன் தாண்டவமாடும். அதைப் பார்த்துக் களிப்புறு. நீ சாகுமளவும் இன்றையக் காட்சி உன் மனக் கண்ணின்முன் தோன்றி நர்த்தனம் புரியும். உன்னை நான் ஒன்றும் செய்ய மாட்டேன். உன்னைக் கொன்றால் என் ஆத்திரம் தீர்ந்துவிடாது. நீ உயிருடனிருக்க வேண்டும். இன்றையச் சம்பவம் உனக்கு நினைவு வரும்போதெல்லாம் நீ புழுப்போல் துடிக்கவேண்டும். உன்னை வெளியில் துரத்திவிட மாட்டேன். வீட்டிலேயே வைத்திருப்பேன். வருவோர் போவோர்க் கெல்லாம் உன்னுடைய இழிவான குற்றத்தைச் சொல்லி உன்னைச் சுட்டிக் காண்பிப்பேன். அவர்கள் முன்னிலையில் நீ வெட்கிப் புழுங்கவேண்டும். இவ் வாழ்விலேயே நீ நரக வேதனையை அநுபவிக்கும்படி செய்துவிடுவேன். உன் உற்றார் உறவுமுறையாருக்கு உன்னுடைய பாபத்தைத் தெரிவிப்பேன். அவர்கள் தூவென்று காறித்துப்ப வேண்டும். சிறு பிள்ளைகளும் கூட உன்னைக் காண்பித்து ஏளனம் பண்ணும்படி செய்வேன். அப்பொழுது தான் என் மனம் நிம்மதியடையும்" என்று சொல்லிப் பற்களை நறநற வென்று கடித்தான்.

* * *

மணி 12 அடிக்கும் சமயம். இன்னும் சில நிமிஷங்களே இருக்கின்றன. ராமச்சந்திரன் துடித்துக் கொண்டிருக்கிறான். ராஜலக்ஷ்மி திகைத்துப்போய் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். இருளில் ஓர் உருவம் வரும் தோற்றம் தென்பட்டது. ராமச்சந்திரன் ராஜத்தின் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டான்.

"நெருங்கிவிட்டது. பயப்படாதே. உனது காதலனைக் காண்பாய், வா" என்று அவள் கையைப் பிடித்திழுத்துக் கொண்டு மெல்ல அடிமேல் அடி வைத்து அவ்வுருவத்தைப் பின் தொடர்ந்தான். இரண்டு கஜம்தான் இருந்தது. ராமச்சந்திரன் தடியை மேலே ஓங்கினான். இடி இடிப்பதுபோல் ஓர் சப்தம். உருவம் திடீரென்று கீழே விழுந்தது. ராஜமும் ஓவென்றலறிக் கொண்டு கீழே சாய்ந்துவிட்டாள். அவ்வளவுதான்; பிரக்ஞை தவறிவிட்டது. எவ்வளவு நேரம் ஸ்மரணையற் றிருந்தாளென்று அவளுக்குத் தெரியாது. கண்விழித்துப் பார்க்கும்போது ஒரே வெளிச்சம். தன் வேலைக்காரி அஞ்சலை கீழே கிடக்கும் ஓர் பிரேதத்தின் மீது விழுந்து புரண்டழுதுக் கொண்டிருக்கிறாள். இடையிடையே ராமச்சந்திரன் பக்கமாகத் திரும்பி ஏதேதோ பிரலாபிக்கிறாள். ராஜத்திற்கு ஒன்றும் புரியவில்லை. மெல்ல எழுந்திருந்து நின்றாள். இவள் எழுந்திருந்ததைக் கண்டதும் ராமச்சந்திரன் பைத்தியம் பிடித்தவன் போல் அவ்விடத்தை விட்டு ஓடினான்.

* * *

ராமச்சந்திரன் வெகு நேரம் ஓடிக் கடைசியாகக் காவேரி ஆற்றுப்பாலத்தின் மேல் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்தான். அவன் முகம் சூன்யமாயிருந்தது. வாய்விட்டுப் புலம்ப ஆரம்பித்தான்.

"முட்டாள்! ராஜலக்ஷ்மி நல்லவள்; பரிசுத்தமான பெண். அவளுக்கு நான் லாயக்கில்லை. குமாரனும், அஞ்சலையும், காதலர்கள். இரவில் அஞ்சலையைக் காணக்குமரன் வந்திருக்கிறான். ராஜத்தைக் சந்திக்கத்தான் கள்ளக்காதலன் வருகிறானென்று நான் எண்ணினேன். ஐயோ! அவள் மனதை மிகவும் துன்புறுத்தி விட்டேனே! அதோடுமட்டுமா? அஞ்சலையின் காதலனையும் கொன்றுவிட்டேனே! அவள் முகத்தில் நான் இனி எப்படி விழிப்பது? நாங்களிருவரும் இனி ஒரே வீட்டில் இருக்க முடியுமா? ராஜந்தான் இனி என்னை மதிப்பாளா? அவளது பரிசுத்தத்தில் நம்பிக்கையில்லாமல் முரட்டுத்தனமாக, அனாவசியமாக ஒரு ஜீவனைக் கொன்றதை அவள் மறப்பாளா? என்னை மன்னித்து விடலாம். ஆனால் இச்சம்பவத்தை மறந்துவிட முடியுமா? இது அவர்கள் மனதில் இருக்கும் வரையில் அவர்கள் என்னை எப்படி வெறுப்பின்றி நடத்த முடியும்? ஆம். ஆம். பிசகுதான். ராஜம்! நீ உத்தமி; உன்னை நான் அறிந்துக் கொள்ளவில்லை. நீ பதிவிரதை. உன்னை எனக்குப் போற்றத்தெரியவில்லை. நீ களங்கமற்றவள்; அதன் மகிமையை நான் உணரவில்லை. நான் மடையன். என்னை மன்னித்து விடு. நான் போய் வருகிறேன்." என்று சொல்லிக்கொண்டே ஆற்றில் குதித்து விட்டான்.

* * *

ராமச் சந்திரனைத் தேடி ராஜம் எங்கெங்கோ ஆட்களை அனுப்பினாள். ஒன்றும் பயனில்லாது போயிற்று. இரண்டு நாள் கழித்து அவன் பிரேதம் காவிரியாற்றங் கரையில் ஒரு நாணற் புதரோரம் கண்டெடுக்கப்பட்டது. ராஜத்துக்குச் செய்தி அறிவிக்கப்பட்டது. போய்ப் பார்த்தாள்; மனம் கலங்கிவிட்டது.

"ஐயோ—நாதா! தாங்கள் இந்தக் கதிக்கா உள்ளாகவேண்டும்! தவறுதலாய்த் தாங்கள் ஓர் குற்றம் செய்தீர்கள். அதை நான் மன்னிக்க மாட்டேனென்று நினைத்தா தங்கள் உயிரை மாய்த்துக் கொண்டீர்கள்? தங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமில்லாத நான் இவ்வுலகத்தில் எதற்காகவிருக்க வேண்டும்? நானும் வருகிறேன்; என்னையும் அழைத்துச் செல்லுங்கள்" என்று சொல்லிக்கொண்டே தடாலென்று கீழே சாய்ந்தாள். பக்கத்திலிருந்தவர்கள் திடுக்கிட்டுத் தொட்டுப்பார்த்தனர். தேகம் ஜில்லென்றிருந்தது. கை, கால்கள் விறைத்துவிட்டன. புன்னகை தவழ்ந்த முகத்துடன் கணவனைத் தொடர்ந்து சென்றுவிட்டாள் ராஜம். அவள் உத்தமி!

---

காதல், காதல், காதல்,
காதல் போயில், காதல் போயில்,
சாதல், சாதல், சாதல்.

—பாரதியார்.

---

## காதலே உயிர்!



# கிராமபோனின் தற்சரிதை

சிற்சில இயற்கைப் பொருட்களை சிற்சில அளவுகளில் கூட்டி இணைத்தால் ஒருவிதமான சக்தியுண்டாகும். இதனை பவர் என்றும், விசையென்றும், ஒளியென்றும், அசைவு என்றும், உயிர் என்றும் கூறுகிறார்கள். இரண்டுமூன்று வருடங்கட்கு முன்பு சிகாகோவில் ஓர் நிபுணர் சில மிருகங்களின் மூளையைச் சுட்டுச் சாம்பலாக்கி, அவற்றைச் சில மருந்துகளோடு, சில தனிப்பட்ட அளவுகளில் சேர்த்து, ஒரு கண்ணாடிக் குழாயில் போட்டு, மின்சாரத்தை ஏற்றினார். உடன் சாம்பல் சக்திபெற்று, மாற்றமடைந்து, சில நிமிஷ நேரங்களில் ஒரு புதிய ஜந்து (பிராணி)யாக வெளிவந்தது. என்ன ஆச்சரியம்! அந்த நிபுணர் சில அணாச் செலவில் ஒரு பிரம்மாவாகிவிட்டார்!

ருஷ்யாவில், பொட்டல்களில் பயிர் செய்வதற்கான வழிகளைக்கண்டு பிடிக்க முயன்று, பெரும்பெரும் விஞ்ஞானிகள் ஆயிரக்கணக்கான சோதனைகளைச் செய்து பார்த்தார்கள். அவர்களிடையே சிலர், புதுமாதிரியான—அதாவது உலகிலில்லாத—தானியங்கள் உற்பத்தி செய்யப்பட்டால் தான் நன்றாக முளைக்குமென்று கண்டனர். எனவே கூர்ந்து நோக்கி அப்புதிய தானியம், தற்போது கடவுளால் படைக்கப்பட்டிருக்கும் எந்தத்தானியத்தை யொத்திருக்க வேண்டுமென்று யோசித்து, பொட்டலைப் பரீட்சித்து, கடைசியில், ரை, ஓட்ஸ் என்ற இருதானியங்களையும் சேர்த்து மூன்றாவதொன்றாக மாற்றினர். இன்று ருஷ்யா முழுதும் அப்புதுத் தானியம் காணப்படுகின்றது. சத்திய லோகத்திலிருக்கும் பிரம்மா அதனைக்கண்டு என்ன 'ரிமார்க்' எழுதினாரோ!— கோபப்பட்டாரோ!—செய்தி கிடைக்கவில்லை.

இத்தாலியில் ஓர் தோட்டக்காருக்கு ஒருநாள் 'ஏன் சிவப்பு ரோஜா, ரோஸ் (நிறமான) ரோஜா, மஞ்சள் ரோஜா, நீல ரோஜா முதலியவைகளிருப்பதுபோல் கருப்பு நிறமான ரோஜாவும் இருக்கக் கூடாது' என்று தோற்றிற்று. உடனே அவர் ஓர் வெண்மை ரோஜாவைப் பிடித்துக்கட்டிச் சில பொருட்களை அருத்தினர். இன்னும் என்னென்ன அபூர்வ வைத்தியம் செய்தாரோ? சில நாட்களுக்குள் கருப்பு நிறமான பூக்களை ஈன்றது அச்செடி. உடனே அப்பூக்களை சிஞ்ஞோர் முசோலினியிடம் காண்பித்து, அவருடைய புதல்வியின் நாமத்தை அப்புஷ்பத்திற்குச் சூட்டுவதாகச் சொன்னாராம்.

இப்படி உயிர்களென்பவற்றைப்படைப்பது போலவே, அவற்றை யொத்த விசை, வெளிச்சம், சக்தி முதலியவற்றையும் படைக்கின்றார்கள் நிபுணர்கள். சில



அட்வகேட் கஜித்தார் லாபோ ஒரு 8 அடிச் சிறுத்தையைச் சுட்டுக் கொன்றார். படத்தில் அவர் இரு புலிகளுடன் காணப்படுகிறார். —P.P.B.

தகடுகளையும், ஊசிகளையும், கம்பிகளையும், சிற்சில அளவுகளில், சிற்சில அமைப்புகளில் போட்டுக் கூட்டினால் அபாரமான ஆச்சரியத்தைக் கொடுக்கும் பொருட்களாகி விடுகின்றன. உயிருக்கும் அப்பொருட்களுக்குமுள்ள வித்தியாசத்தை நன்றாக அறியாதோர் அவற்றை இயந்திரமென்கின்றனர்.

அது எப்படியாவது போகட்டும். என்னை ஓர் இயந்திரமென்றே தற்காலம் வைத்துக்கொள்ளுங்கள். என் உடல் சில தகடுகளாலும் கம்பிகளாலும் ஆக்கப்பட்டிருக்கிறது. அக்கம்பிகளையும், தகடுகளையும் தகுந்தவிடங்களில், தகுந்த முறையில், தகுந்த வடிவத்தில் கோர்த்து விட்டால் நான் உயிர்பெற்று விடுவேன்; மிக அற்புதமான வேலைகளையும் செய்வேன்.

என்னை சங்கீதம் பாடவும், பிரசங்கம் செய்யவும், பாடசாலைகளில் பாடம் போதிக்கவும், ஆஸ்பத்திரிகளில் நோய் தீர்க்கவும் உபயோகிக்கிறார்கள். சில தாய்மார்கள் தம் குழந்தைகளை அழாமல் பாதுகாத்துக் கொள்வதற்கும் என்னை உபயோகப்படுத்துகிறார்கள். அதோடு வேடிக்கை பேசுவதில் நான் உபயோகப் படுவதைத் தமிழ் நாட்டில் அறியாதார் இருக்க முடியாது.

இப்போது, நான் உலகில் ஜாதிமத வித்தியாசம் பாராட்டாது, கற்றோரிடத்திலும், நல்லவர்களிடத்திலும், தீயர்களிடத்திலும், நாகரிகர்களிடத்திலும் அநாகரிகர்களிடத்திலும் உறவுபூண்டுள்ளேன். பல காப்பி ஹோட்டல்காரர்கள் என்னால் லாபமடைகின்றார்களென்பதும், அசைவுப்படக்காரர்கள் என்னைச் சேர்த்துக்கொண்டு, நாடகக்காரர்கள் வாயில் மண்ணைவாரிப் போட்டுவிட்டார்களென்பதும், பலதர்சிகள் என் உதவியால் தம்மைநாடிவரும் ஸ்திரீ லோலர்களைப் பாதி மயக்கிவிடுவதில் வெற்றி யடைகின்றார்களென்பதும் வெட்டவெளிச்சம். ஆனால் இப்போது ஜப்பானியர்—வியாபார ராக்ஷசர்களாய் விளங்கும்அந்தக்கொடியார்கள்—என்னை பத்து ரூபாய்க்கும் பதினொரு ரூபாய்க்

கும் விற்பனை செய்து மானம் கெடுத்ததோடு நில்லாது அந்தோ! ஒரு ரூபாய் முக்கால் ரூபாய், அரை ரூபாய்க்கும் கூட விற்க ஆரம்பித்து விட்டார்கள். இதனால் என் பூர்வீகப் பெருமை சாலவும் பாழ்பட்டுப் போயிற்று!

ஆ! முன் நாளில் எனக்கிருந்த பெருமைதானென்னே! பெரும்பெரும் பணக்காரர்களெல்லாம் என்னைக் கண்டால் வாய் பிளப்பார்கள்! ஏழைகள் தங்கட் கெட்டாக்கனியென எண்ணி கொட்டாவி விடுவர். அந்தக் காலத்திற்கும் சற்று முன்பு, நான் கொஞ்சம் இரகசியமாகச் சிலசில நிபுணர்களிடம் மட்டிலுமே உலாவி வந்தேன். அதற்கும் சற்று முன்பு நான் அமெரிக்காவை விட்டு வெளிவரவேயில்லை.

என் சொந்தநாடு (தாய்நாடு) அமெரிக்காதான். அங்குள்ள ஒரு மனிதப் பிரம்மா—எனவே உண்மைப் பிரம்மா—தான் என்னைப் படைத்தார். அவரது பெயர் ஆல்வா எடிசன் என்று சொல்லப்படும். அவர் உலகில் கண்டுபிடித்த அற்புதங்கள்—ஏன் படைத்த படைப்புகள்—ஓராயிரம். அவ்வாயிரமும் அவர் போலேயே அழைக்கப்படுகின்றன. மின்சார மென்ற ஒளியைக் கண்டுபிடித்தவர் அவர்! ஆகையால் உலகிற்கொளியை—சக்தியை—விசையை—எனவே எல்லாவற்றையும்—அளித்தவர் அவரே என்னலாம். இன்று இயந்திர மனிதனொருவன் கேட்ட கேள்விகட்குப் பதில் கூறுகிறான், பத்திரிகை வாசிக்கிறான், சங்கீதத்திற் கொத்தவண்ணம் நடனம் செய்கிறான், அரை நொடியில் உலகை அழித்துவிடுவான் என்றால் அதற்குக் காரண பூதாயிருந்தவர் ஆல்வா எடிசன்தான். ஆ! ஆ! இன்று உலகில் காணப்படுகின்ற கோடிகோடி இயந்திர உண்மைகட்கு மூல புருஷர் அவரே!! திரையில்லாது—அதாவது நாடக மேடையில் தோன்றும் நடிகர்களைப் போல்—நிழல் (மனித உருவம்) வந்து ஆக்டு செய்வதன் மூலம் சினிமா உலகில் ஓர் புரட்சி ஏற்பட்டிருக்கின்றதென்று எவரேனும் கூறினால், அதற்கும் மூல புருஷர் ஸ்ரீ. எடிசனென்றே கொள்ளல் வேண்டும்.

இந்தப் பொல்லாத எடிசன் சுமார் 56 வருடங்கட்கு முன்பு, ஓர் நாள், ஏதோ ஒரு இயந்திரத்தைக் கண்டுபிடிப்பதற்காக, ஒரு குழாயினுள் "ஸ்பிரிங்" என்னும் சுருள் கம்பியை நுழைத்து, அதன் ஓர் நுனி சற்று வெளியே தெரியுமாறு, நீட்டியிருந்த தம் பெருவிரலின் சமீபத்தில் வைத்துக்கொண்டு, 'ஸ்பிரிங்' சரியாகப் பொருந்தியிருக்கிறதா வென்று குழாயின் மற்றக் கடைசி வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது யாரோ ஒரு நண்பர் வந்துவிட்டதால், அவரோடு பேசவேண்டி வந்தது. ஆ! என்ன ஆச்சரியம்! அவர் பேசப் பேச 'ஸ்பிரிங்'கின் நுனி, பெருவிரலில் குத்திக் கொண்டே இருந்தது. அஃதுடன், உரக்கப் பேசினால் பலமாகவும், மெதுவாகப் பேசினால் இலேசாகவும் குத்த ஆரம்பித்தது. இதனை, நுட்புத்தி யுடையவரான எடிசன் கவனித்துக்கொண்டு, ஓசைக்கு ஓர் சக்தியுண்டு என்ற முடிவுக்கு வந்தார். இதிலிருந்துதான் என்னைப்படைக்க முயன்றாராம்.

அவர் ஆதியில் என்னைப் பெற்றதும் (ஈன்றதும்) போனோகிராப் என்று பெயரிட்டார் என்பது ஞாபகம். அப்பால் கிராமபோன் என்று சிலர் சொன்னார்கள். இப்போது யார் யார் என்னைப் படைக்கின்றார்களோ அவர்களெல்லாம் 'போன்' என்ற பதத்தை மட்டிலும் பிடித்துக்கொண்டு முன்னடியிருப்பதை மாற்றிக் கொள்கிறார்கள்.

எடிசன் என்னைக் கண்டுபிடிப்பதற்குப் பல வருஷங்கள் முன்னடியே நான் உலகில் பிறப்பேனென்று சொல்லப்பட்டேனும். சிரானோ—டி—பெர்காரக் என்ற ஒரு ஆசிரியர் 'சந்திரமண்டலத்துக்குக் க்கப்பல் பிரயாணம்' என்று ஓர் நூல் எழுதினாராம். அதில் 'எதிர்காலத்தில் கண்ணால் பார்க்க முடியாத புத்தகங்கள் காதுக்காக எழுதப்படும்' என்று குறிப்பிட்டாராம். ஆதலால் எடிசன் ஜேபியில் விழவேண்டிய பாக்கியத்தின் ஒரு பகுதி பெர்கொரக்கின் பாலும் செல்கின்றதென்று சிலர் சொல்கிறார்கள்.

எடிசன் ஆக்கிய என் முதல் உருவத்தில் சுழன்றுக் கொண்டிருக்கும் ஒரு பித்தளைக் குழாய் முதன்மை பெற்றிருந்தது. அதன்மீது, அவர் பல பள்ளங்களைச் செய்து அப்பள்ளங்களில் ஈயத்தைப் பூசியிருந்தார். அக் குழாய் ஓயாது சுற்றிக் கொண்டேயிருந்தது. ஈயத்தின்மீது ஒரு 'போனி'ன், நுனியில் ஒரு ஊசியைவைத்து போனுக்குள் பேசினார். பேசப் பேச ஈயத்தின்மீது பல கோடுகள் விழுந்தன. இதுதான் 'ரிக்கார்டு' அல்லது பிளேட்(?) என்று சொல்லப்படுவது.

இந்த ரிக்கார்டு ஏற்பட்டு ஒன்பது வருடங்கள் சென்றதும், எமிலிபெர்லினெர்என்பவர். மெழுகினாலான பிளேட்டுகளைச் செய்தார். இவர்தான் நவீனப் பிளேட்டுகளின் மூல புருஷர்.

அந்தக் காலத்திலெல்லாம் என்னுருவம் இப்போதிருப்பது போல் அமைந்திருக்கவில்லை. கடிகாரம் போன்ற இயந்திரத்தினாலும் நான் இயங்கிக் கொண்டிருக்கவில்லை. சமீபத்தில் 1905-ம் வருடத்தில்தான் எனக்குக் கடிகார இயந்திரங்களைப் பூட்டினார்கள். 1910-ல் சிலருடைய முயற்சியால் போன்களெல்லாம் என் வயிற்றுக்குள்ளேயே அடங்கியிருக்கும்படி செம்மை செய்யப்பட்டேன். ஆ! இதுகாலை—"மைக்ரோ போன்" இயந்திரமும் "ஆம்ப்ளிபையர்" கருவிகளும் தாராளமேற்பட்டிருக்கும் இது தருணம்—நானடையும் மாற்றந்தானென்னே! ஒரு ஜர்மன் நிபுணர், மனிதர் பாட்டுப் பாடும் சமயத்திலேயே ரிக்கார்டு தயாரித்து மறுபுறம் அதனை வெளியே கொட்டும்படியாக என்னை எழுப்பிவிட்டு வேலை வாங்கினர்!

இதைவிட விசேஷம் ஆங்கிலக் கம்பெனி யொன்று இப்போது இயற்றியிருக்கும் புதுமையாகும். என் விலாவொன்றில் ரிக்கார்டுகளை கடிதம் வைப்பதுபோல் செருகிவிடுகிறார்கள். நான் அவற்றை ஒவ்வொன்றாக எடுத்துப் படித்துவிடுகிறேன். அஃதோடு விடுகிறேனா? ஒரு ஏட்டைப் படித்து முடித்ததும், என் விசையைச் சிறிது அடக்கிக்கொண்டு அதனை மறுபுறம் ஓர் பலகையில் எடுத்து வைக்கிறேன். இங்ஙனம் ரிக்கார்டுகள் (ஏடுகள்) எல்லாம் படித்து முடிந்தால் நான் சும்மாவிருந்து தூங்க ஆரம்பிக்கிறேன். இந்த அபூர்வ வேலையை நான் கைக் கொண்டதும் பணக்காரர்களெல்லாம் என்னை நாடுகிறார்கள். என் மதிப்பும் அதிகமாகியிருக்கிறது. ஆனால் அப்பாழும் ஜப்பானியர் என்னை சந்திக் கிழித்துவிடுகிறார்களோ என்னமோ? நாளடைவில் பார்க்கிறேன். வணக்கம்.

ஊக்கமது கைவிடேல்






தொடர் கதை

# கருவழியில் காதலி

(Eesy)

(31-8-34 தொடர்ச்சி)

மங்கையர்க்கரசியின் கடிதம்

கூனியூர்,
காதலி நிலயம்.

அன்புள்ள ஐயா,

நான் தங்கட்கு ஓர் கடிதமெழுதுவது அசம்பாவித மென்று நினைக்கப்படலாம். என் கருத்து அதுவல்ல. எத்தனையோ நாட்கள் தங்கட்குக் கடிதம் எழுதும் விஷயம்பற்றி ஆழ்ந்து சிந்தித்தேன்; நீளமாக யோசித்தேன். கடைசியில் தங்கட்கு நான் கூனியூரிலிருந்து ஓர் நிருபம் விடுப்பது தவறல்ல என்ற முடிவேற்பட்டது. கல்யாணத்தன்று உங்கட்கும் எனக்கு மேற்பட்ட மனோ ஐக்கியம்—தெளிந்த பாஷையில் கூறுவதானால் எவராலும் பெயர்க்க முடியாத இருதய நற்கூட்டுறவு—பற்றிய உண்மை நம்மிடையே ஓர் இரகசியத் தனியாக விருக்கையில் ஏன் நான் சங்கிக்க வேண்டும்? அன்று இரவு, உணவருந்தியபோதும், பதார்த்தங்கள் பரிமாறப்பட்ட போதும் நீங்கள் என்மீது மாறிமாறி எறிந்த அன்பு நோக்கும், ஆசைப் புன்சிரிப்பும் ஆ! என் இருதயவானில் மிளிர்ந்து கொண்டிருப்பது தானென்னே! தண்ணீர் கொடுப்பதற்காகக் கையை நீட்டுகையில், நீங்கள் கிள்ளுதல் என்ற பெயரால் போட்டீர்களே ஓர் சீல் (முத்திரை) இரு விரல்களால், அதனை எந்த நாளையிலும் மறக்க முடியுமோ? தாங்கள் கையில் போட்ட அம்முத்திரை நரம்பு வழியாக வோடி இருதயத்திலு மன்றோ அழியாதவாறு பதிந்துவிட்டது! என் அன்பே! அதன்மேல், நோயுற்றிருந்த வன்று, நமக்குள் ஏற்பட்ட உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கும் அன்பின் முதிர்ச்சியால் இரு சார்பிலும் தலைகாட்டிய செயல்கள்—என் காதல் ரசம்—நம்மால் எந்த ஜன்மத்திலேனும் மறக்கத்தகுவதோ? இறக்கப்போகும் தருவாயிலிருந்த நீங்கள் என் முகத்தைக் கண்டதும், கண்கலங்கி, நீர்வடித்து, கைநீட்ட, நான் அத்திருக்கரத்தை மார்போடணைத்து, முத்தமீந்து, அப்பால் முன்தானையால் தங்கள் கண்களையும் வாயையும் துடைத்தேனே.......... ஆ! அதுபோன்ற இன்பத்தை இவ்வையகமும் அடைந்திருக்குமோ? புராண ஆசிரியர்கள் கூடவும்—கம்பனுமினும், காளிதாசனுமினும் சரி—கனவிலேனும் சிந்தித்திருப்பரோ!

என் காதல் பிணரே! அத்தகைய ஒப்புயர்வில்லா எழுத முடியா—சொல்ல முடியா—நினைக்க முடியா—மறக்க முடியா—இன்பத்தின் ஊற்றாக நீங்களும், அவ்வூற்றினால் தாகந்திருபவளாக நானும் இருக்கையில் ஓர் கடிதத்தை எழுதாதிருப்பனோ! நன்கு, உள் நுழைந்து, ஆழ்ந்து, அலசிப் பார்க்கின், தங்கட்குக் கடிதமெழுதாத மங்கையர்க்கரசி ஓர் பிணத்திற் கொப்பாக வன்றோ கருதப்படுவாள்?

என் காதற் கொழுந்தே! அன்று நீங்கள் விடைபெற்றுக் கொண்டதின் சற்று முன்பு, என்னை நாடி, எத்தனையோ கேள்விகள் கேட்டீர்களே; அவற்றிற் கொன்றுக்கேனும் நான் பதிலிறுக்கவில்லை யன்றோ? தயவுசெய்து எனது கடமை மறுப்பைச் சிறிது மன்னித்திடுக. நீங்கள் என்னைப்பற்றிப் பலப்பல அறிய வேண்டும் என்று ஆசை கொண்டிருந்தீர்களென்பதனை முன்னடியே அறிவேன். எப்படியாவது அந்தச் சந்தேகங்களைத் தீர்த்துவிட வேண்டுமென்றும் நினைத்தேன். அந்த நிலைமையில் நீங்கள் போட்ட கேள்விகள் எல்லாம் உத்தமமான சந்தர்ப்பமாக வன்றோ இருக்க வேண்டும்? ஆனால்—ஆ!—என்ன உலகம்! என்ன வழக்கம்! என்ன பழக்கம்! என்ன படிப்பு!..............நாணமெனும் பேய் உங்கட்கு மெனக்கு மிடையில் தோன்றி அரூபியாய் நின்றுக்கொண்டு என்னை நோக்கி உருட்டி விழித்துக் கொண்டிருந்தது. எனவே நான் பயந்து உங்கள் முகத்தை நோக்கவும் வாயெடுத்துப் பேசவும் தைரியம் இல்லாதவளானேன். ஒன்றிரண்டுதரம் என் மனம் தாங்கள் பன்முறை வற்புறுத்து வதைக் கண்டு—அதிலும் விசேஷமாக 'நான் போய் வருகிறேன்' என்று அருளுவதைப் பார்த்து—ஒரு வார்த்தையாவது சொல்லிவிடலா மென்று கச்சைகட்டி, நாவின் நுனிவரையிலும் துணிச்சலைக் கொணர்ந்தது. ஆனால்! அப்பாழும் நாணப் பேய்!..........பல்லைக் கடித்துப் பயப்படுத்தி "அடீ! என் வெருட்டலைப் பொருட்படுத்த மாட்டாயோ?" என்று சினந்தது. உடன் நான்—சக்தியற்றவளானேன். ஆதலால் என் ஆருயிர் ஊசலே! நான் அன்று பதில் கூறாததற்காகக் கருணை கூர்ந்து மன்னிக்கவும். மன்னிக்க வேண்டுமென்று பல்கோடித்தரம் தங்களிடம் பணிந்து வேண்டிக் கொள்கிறேன். அதோடு நம்மிடையே திடீர் திடீரெனத் தருந்த முகவுரையுடனும் இல்லாமலும் நடைபெற்றுவிட்ட காதற் செயல்களை கனிவுடன் ஞாபகப்படுத்திக் கொள்ளவும் வேண்டுமென்று மிகவும் தாழ்மையாகத் தங்களிடம் கேட்டுக் கொள்கிறேன்.

அப்பால்—காணாரும் பெரிய என் காதற்பிழம்பே! இக்கடிதத்தை வாசிக்கு முன் என்னை யொருமுறை நீளமாக மன்னித்திடுவதாக வாக்களியுங்கள்! இந்தவிடத்தில் என்னை மன்னித்துக் கறையைத் துடைத்து விட்டதாக உறுதி கொள்ளாமல் போனால் ஆசை ஒளியே! இதற்கப்பால் வாசிக்க வேண்டாம்; கடிதத்தைக் குப்பைத் தொட்டியில்—இல்லை எவரும் எடுத்துவிடாதவாறு நெருப்பிலிட்டுச் சுட்டுப் பொசுக்கி இப்படியொரு மங்கையர்க்கரசி இருந்தாளென்பதனையே மறந்து விடுங்கள்!.....................

என் அன்புத்தேனே! நீங்கள் மன்னிக்க வேண்டிய விஷயம் என்ன தெரியுமா? அது இலேசானதல்ல. உயிரைக் கொள்ளுமோர் அரும்பெரும் விஷயம்! காதல் என்ற உறை பாதாதிகேசம் புதைத்து, இருதயத்தையும் மறைத்துக் கொண்டிருக்கவில்லை யானால் என்னை மன்னிக்க முடியாது. நீங்கள் மன்னித்ததாக அறிந்து விட்டேனானால்—ஆ!—என்னால் தங்களை எவ்வளவு நன்றாக அளந்துவிட முடியும்!

என் தீங்கரும்பே! நீங்கள் நோயுற்று இரத்தம் இரத்தமாக வாந்தியெடுக்கவும், உயிர் ஊசலாடும் நிலைமைக்கு வரவும்—ஐயோ! என்ன கொடுமை! பன்னூறு

வருடம் நீங்கள் க்ஷேமமே வாழ்க!— அன்றி எழுதமுடியாத பல அவஸ்தைகட்காளாகவும் இடமாக வேண்டியிருந்ததற்குக் காரணம் நானே! நான் பேதமையால்—இல்லை காதலென்னும் பித்தம் தலையிலேறி மயங்கிவிட்டதால்—தங்கட்குத் தனியுபசாரம் செய்யக்கருதி பாயசத்தோடு உண்டு களிப்பதற்காக—அதோடு என் பாசத்தைத் தெரிவித்துக் கொள்வதற்காக — திருமலையப்பர் பதுக்கிவைத்திருந்த தேனை யெடுத்துத் தங்கட்குப் பரிமாறக் காரணமாயினேன். அந்தோ! அத்தேன் உண்பதற்கு அமைந்த தல்லவாம்!! ஏதோ வைத்திய முறைக்காக திருமலையப்பர் வீரமெனும் நஞ்சைக் கலந்து சிற்சில சோதனைகளைப் பார்த்துவிட்டு ஓர் மூலையில் பதுக்கிவைத்திருந்தாராம். அவ்வுண்மையை அறியாத நான் பேதை—பாவி—காதகி—ஐயோ! என் அன்பிற்கறிகுறியாகத் தங்கட்கு ஊட்டிவிட்டேன். அதனாலேயே தாங்கள் வாந்தி யெடுக்கவும் தத்தளிக்கவும் செய்தீர்கள். நான் தங்கட்கு நஞ்சை அளித்தேன் என்பது எனக்கும் அன்றி எவருக்குமே தெரியாது. டாக்டர் தங்களைப் பார்த்துவிட்டு, விஷமுண்டிருப்பதாகக் கூறியபோதுதான் நாங்கள் எல்லோரும் அதற்கு ஏதேனும் முகாந்தர முண்டாவென்று ஆராய்ச்சி செய்தோம். சில சீர்திருத்த வாதிகள் திருமணத்திற் கெதிராயிருந்தோர் சூழ்ச்சியாகத் தங்கட்கு விஷத்தை அருத்தியிருக்கலாமென்று அபிப்பிராயப் பட்டனர். ஆனால், மதிநுட்பமுடைய திருமலையப்பர், நம் மிருவருக்குமிடையே நடந்துகொண்டிருந்த, மானசீகத் தந்திப் போக்கு வரவுகளை மறைமுகமாகக் கவனித்துக் கொண்டிருந் திருக்கின்றாராகையினால் சமையற்கட்டைப் பரிசோதித்தார். அவர் கண்களில் வீரம் சேர்ந்த தேன் போத்தல் குறைவுபட்டிருப்பது தெரிந்தது. உடனே அவரும் ஸ்ரீமதி கல்யாணியும் என்னை அடைந்து "உண்மையைக் கூறினாலாயிற்று; இல்லையேல் அவா உயிர் அழிந்துபடும்" என்று கூறினர். இரண்டாவது வாக்கியத்தைக் கேட்ட பின்னரும் சும்மா விருப்பனோ நான்? உண்மையைக் கூறிவிட்டேன். அது முதல் அவர்கள் டாக்டர் சிகிச்சையை வேறு வழியில் திருப்பித் தாங்கள் பிழைப்பதற்குக் காரணமாயினர்.

திருமலையப்பர் விஷத்தின் உண்மையைத் தெரிந்ததாலேயே அன்று பாட்டி "எப்படி விஷம் சென்று விட்டது அவர் வயிற்றில்? என்ன மாயமாயிருக்கிறது? அவர் ஒரு இடத்துக்கும் போகவுமில்லை; ஒருவரிடமும் ஒரு பண்டமும் வாங்கிச் சாப்பிடவுமில்லையே" என்று சொன்னபோது, அவர் "கழுதை எப்படியாவது போகட்டும். நமக்கு உயிர் கிடைத்ததே பாக்கியம்" என்று கூறித் திடீரென என்னைத் திரும்பி நோக்கினார். அதனை நீங்களும் கவனித்தீர்களன்றோ?

என் தமிழ்த் தீஞ்சுவையே! நமக்குள் ஏற்பட்டிருக்கும் காதல் பிணிப்பு திருமலையப்பருக்கும் சகோதரி கல்யாணி அம்மாளுக்கும் தெரிந்திருப்பதோடு நில்லாது, அவர் வழியாக பாட்டிக்கும் தெரிந்துவிட்டது! என் பாட்டி—இல்லை நம் பாட்டி—மிகுந்த நுட்ப புத்தியுடையவராவர். அவர் ஒன்றிரண்டு நாள் கல்யாணத்திலும் விருந்திலும் நோய் பார்ப்பதிலும் ஈடுபட்டிருந்தாற் போல் தோற்றினும் என்னுடைய—நம்முடைய—இரகசியம் முழுவதையும் தெரிந்திருக்கின்றார். அன்று நீங்கள் விடைபெற்றுக் கொண்டபோது, உங்களைப் பற்றி நன்றாக விசாரித்ததின் மர்மம் இதுவாகத்தானிருக்க வேண்டுமென்று நான் கருதுகின்றேன். அஃதுடன் என் ஆசைக் காதலா! அன்று நீங்கள் வீட்டுக்குள் நுழைந்ததும் "சற்று இருங்கள்; தாம்பூலம் கொண்டு வருகிறேன்" என்று கூறிக்கொண்டு பாட்டி வெளியே சென்றதின் உட்கருத்து நாமிருவரும் சற்று நேரம் பேசிக்கொள்ளட்டுமென்று நினைத்ததாகவே தானிருக்க வேண்டுமென்று தோற்றுகிறது. இத்தோற்றத்தை ஓர் கனவு என்று நீங்கள் கருதமாட்டீர்களென்பது என் நம்பிக்கை. நான் பலநாட்களாக நன்கு யோசித்துவிட்டு அப்புறமே இதனை வெளியிடுகிறேன். நம் பாட்டி அவ்வப்போது என்னிடம் பேசிக்கொள்ளும் முறையைக் கவனித்தால், மேலே சொன்ன கருத்து நூற்றுக்கு நூறு வலியுறுத்தப்படும். நன்றாக ஆராய்ந்தால் பாட்டி நாமிருவரும், நன்கு, ஐக்கியப்பட்டு, இணைந்து வாழ்வதைப் பூசிப்பார் என்பதிற் சந்தேகமில்லை. அவரைத் தங்களது ஒரு நாளையப் பிரசங்கம் தலை கீழாகப் புரட்டிவிட்டது என்பதுறுதி உறுதி!

இந்த விடத்தில் ஓர் இரகசியம். நீங்கள் சென்றதின் பின்னர், நம் பாட்டியும் அத்தான் திருமலையப்பரும் ஏதேதோ எனக்குத் தெரியாமல் பேசிக்கொள்கிறார்கள். சகோதரி கல்யாணி அம்மாளும் கலந்துக்கொள்கிறாள். இந்த இரகசியப் பேச்சின் அந்தரங்க மென்னவென்பதை அறியேன். ஒன்றிரண்டு முறை கல்யாணி அக்காளிடம் கேட்டேன். அவர் நகைத்துச் சமாளித்ததன்றி யாதும் பதில் கூறவில்லை. பெரும் பான்மையும் நன்மைப்பற்றியே இருக்கவேண்டும் அப்பேச்சு.

என் கன்னற் சுவையே! நான் எதெதுவோ சொல்லத்தொடங்கி எதையெதையோ எழுதிவிட்டேன். என்னிடம் நீங்கள் கேட்ட கேள்விகள் பெரும்பான்மையும் என் வரலாற்றைப் பற்றியதன்றோ! ஆகவே அதனைக் கூறிவிடுகின்றேன். அவ்வாறு கூறுவதில் வேறொரு உத்தேசமுமுண்டு.

என் சொந்த ஊர் ஸ்ரீவைகுண்டம்; அங்கு சன்னதித் தெருவில் காமாக்ஷிநாத முதலியார் என்பவர் ஓர் பிரபலஸ்தர். அவரும் அவர் குடும்பமும் தாசில்தார் பாம்பரை என்று சொல்லப்படுவதியல்பு.

ஸ்ரீ. காமாக்ஷிநாத முதலியார் "சால்ட்" இன்ஸ்பெக்டராகவிருந்தார். திருநெல்வேலி சுதேசிக் கலகம் ஏற்பட்டகாலத்தில்—அதாவது திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையின் தொண்டு உச்சஸ்தானத்தை அடைந்திருந்த காலையில்—திருவாளர் முதலியார் தம் வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டார். அவருக்குச் சுமார் லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள ஆஸ்தியுண்டு. இவ்வாஸ்தி முழுதும் தாசில்தார் பரம்பரை யென்ற பெயரை நிறுவிய மூதாதையரும் திரு. காமாக்ஷிநாத முதலியாரும் தேடியதுதான்.

திரு. முதலியாருக்கு ஓர் தாயாரும் ஓர் சகோதரியும், சில குழந்தைகளுமிருந்தார்கள். சகோதரியின் பெயர் மங்களம். அவர் பெயரால் மங்களமானாலும் "விதியால்" அமங்களமானவர். சொர்ண விக்கிரகம் போன்ற—பார்ப்போர் வாய் பிளந்து பித்தம் கொள்கின்ற அளவு ரூபவதியான—அந் நிர்ப்பாக்கியவதி புருஷனுடன் வாழ்ந்த சில வருஷங்களில் விதவையானார். சற்றுச் சரியாகக் கூறுவதானால், கல்யாணமாகி ஆறு வருடமானதும், அதாவது இருபத்திநான்கு வயதானதும் புருஷன் பிரிந்தார். அதுபோது அத்துர்ப்பாக்கிய மங்கைக்கு



வயிற்றில் ஒன்பது மாதம் கருப்பம்! ஆ! எவ்வளவு கஷ்டமான நிலைமை!

காமாக்ஷிநாத முதலியார் தம் அருமைச் சகோதரி மாங்கல்யமிழந்தாளென்று தெரிந்ததும், மிகவும் சங்கடப்பட்டுத் தம் வீட்டில் வரவழைத்து வைத்துக்கொண்டார். அப்பால் உரிய காலத்தில் அவர் வயிற்றிலிருந்த குழந்தை பிறந்தது. பிறந்ததும் ஸ்ரீ மங்களம் அதன் பாய்ந்தொழுகும் அழகைக் கண்டு, மனந்தேறி, "என் கவலையைத் தீர்க்க வந்தது இக்குழவி" எனப் புகன்று, சற்று இன்புற்றார். நாளடைவில் புருஷனின் பிரிவு அவ்வப்போது கவலையைக் கொடுத்ததானாலும் தம் குழந்தையால் பெரிதும் சந்தோஷ மெய்தினார் அவர். அவரது கவனம் முழுதும் குழந்தையைப் பாமரிப்பதனையே நாடிநின்றது. ஆதலால் அக்குழந்தை நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்ந்ததென்று கூறவேண்டுமோ! காதலா! ஆம்.

அதன் பேச்சு, நடமாட்டம், பார்வை, ரூபம் எல்லாம் மங்களத்தை மயக்கியது போன்றே ஸ்ரீ காமாக்ஷி, அவர் மனைவி, மக்கள், சுற்றத்தார், சிநேகிதர் முதலியோரையும் மகிழ்வித்தது. ஆதலால் சின்னாட்களில் அக்குழவி பலருடைய அன்பிற்குப் பாத்திரமாயிற்றாம். பின் வெகுவாக யோசித்துவிட்டு மங்கையர்க்கரசி யென்று அதனை அழைக்கலாயினர். என் காதலா! அக்குழந்தையே நான் என்று பணிவுடன் தங்கட்குக் கூறுகிறேன்.

என் மாமனார்—(காமாக்ஷிநாதர்) காங்கிரஸ் பற்றுடையார். பொதுவாகப் பெரிய சீர்திருத்தவாதி என்று கூறினாலும் அமையும். அவர் என்மீது காண்பித்த அன்பிற்கு அளவில்லை. எங்கு போனாலும் என்ன செய்தாலும் என்னை அழைத்துப் போகாமலும் உடனுட்கார வைத்துக்கொள்ளாமலுமிரார். அவர் தம் சொந்தக் குழந்தைகளைவிட அதிகமாக என்மீது வாஞ்சை காண்பித்தார் என்றால் அதிகம் ஏன் சொல்ல வேண்டும்? சிலகால் என்னை ஆண் குழந்தை போலவும், சிலகால் பெண் குழந்தை போலவும் சிங்காரித்து அழகு பார்ப்பார். ஏதாவது விருந்துகட்குச் சென்றால், அல்லது உத்தியோகஸ்தர்களைப் பார்க்கப்போனால், அல்லது விழாக்களில் கலந்துகொண்டால் அழகான கதர் ஆடைகளை எனக்குப் போட்டு அழகுசெய்து அழைத்துப் போவார். இத்தியாதி காரணங்களால் என்னைத் திருநெல்வேலி ஜில்லாவில் அறியாதார் இலராயினர். சுமார் 10 வயதிலெல்லாம் என்னை அறிந்தோர் ஆயிரம் ஆயிரம். நானும் கதர் அணிந்து வந்த வழக்கத்தாலும், மாமாவின் பழக்கத்தாலும் பெரிய காங்கிரஸ்காரியைப் போல பேசவும் பாசாங்கு செய்யவும் ஆவேசங் காண்பிக்கவும் செய்யலானேன். ஒருகால் பாலகங்காதர திலகர் திருநெல்வேலிக்கு வந்திருந்தபோது என் மாமா தூண்ட, நான் முன்சென்று, அப்பெரியாரை வணங்கி, அவர் பெயரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் நிதிக்கு என்கை வளைகளை எடுத்துக்கொள்ளுமாறு நீட்டினேன். அச்செயலினால் எனக்கேற்பட்ட விளம்பரம் எவ்வளவென்று சொல்ல முடியுமா?

சுமார் 11 வயதிலெல்லாம் நான் 15 வயதான சாதாரணப் பெண்களைப் போலிருந்தேன். அழகும் அமிதமாகவிருந்தது, அது பலரை என்பால் வசீகரித்திழுத்தது என்று சொன்னால், என் இருதயத்தின் உறைவிடமே! நீங்கள், தற்புகழ்ச்சி செய்கிறேனென்று கருதமாட்டீர்களன்றோ? என் அளவில்லாத அழகு காரணமாகப் பற்பலர் என் மாமாவை அண்மி என் கல்யாண விஷயமாகப் பேசினர். மாமா வந்தவர்களிடமெல்லாம் "குழந்தை புத்தி அறிந்த பிறகுதான் கல்யாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டு"மென்று கூறிவிட்டார். அவருடைய தாயாராகிய என் பாட்டியோ "வயது 16-ஆவது ஆக வேண்டாமா? அதற்குமுன் கல்யாணம் செய்வதென்றால் அர்த்தமென்ன? நம் குடும்பத்திலேயே அந்த வழக்கமில்லையே. ரங்கநாத முதலியார் குடும்பத்தில் 11 வயதிலா கல்யாணம் செய்வது?" என்று முழங்கினார். ஆதலால் என் கல்யாணப் பேச்சுப் பல மாதங்களாக நின்றுபோய் விட்டது.

அப்பால் எனது 14-வது வயதில் பாட்டியின் வற்புறுத்தலால் நானும் என் தாயாரும் பாட்டியுடன் கொக்கிரகுளம் சென்று அங்குள்ள எங்கள் பூர்வீக வீடொன்றில் தங்கலானோம். அங்கு எங்கள் வாழ்க்கை இன்பகரமாகவே நடைபெற்றது. ஏற்கெனவே நான் ஆறாவது வகுப்பு வரையினும் படித்திருந்ததால் ஒரு வீட்டு வாத்தியார் மூலம் தமிழ், பூமிசாஸ்திரம், சரித்திரம், கணிதம் முதலியன கற்கலானேன். என் மாமனார் படிப்பு விஷயத்தில் அதிகமான 'அக்கரை'யுடையவர்; ஆகையால் அடிக்கடி நேரில் வந்தும், கடிதமெழுதியும் என் கல்வியை நன்கு மேற் பார்த்து வந்தார்.

இவ்வாறு நாங்கள் கொக்கிர குளத்தில் தங்கி வந்தபோது நான் புஷ்பவதியானேன். அந்த நிகழ்ச்சியை என் தாயாரும், பாட்டியும்—மாமாவும்கூட—

ஓர் சந்தோஷ சம்பவமாய்க் கருதுவதற்குப் பதிலாக, சங்கடமான விபத்தாக எண்ணினர். ஏனெனில் அதிசீக்கிரத்தில் நான் கல்யாணஞ்செய்து கொடுக்கப் பட்டுவிட வேண்டுமென்றும், அதன் மூலம் அவர்கள் என்னைப் பிரிந்திருக்க நேரிடக்கூடுமென்றும், ஒருக்கால் தகுந்த வரன் கிடையாமற்போனால் அது தூபாத்திற்காவாகவேண்டிய அமையுமென்றும் நினைத்தனர்.

எங்ஙனமாயினும் சுமார் வயது 15 ஆனதும், திருமணப் பேச்சு மும்முரமாக நடைபெற்றது. அப்போது என் உடம்பிருந்த அழகை, என் இன்னிசையே! எவ்வாறு கூறுவேன் உங்கட்கு! ஒரு கால் என்னைப் பற்றித் தப்பான எண்ணம் கொண்டு விட்டாலும் கொண்டு விடுவீர்கள். அப்போது எடுத்தப் புனைப்பட மொன்றை அதிசீக்கிரத்தில் உங்கட்கு அனுப்பித் தருகிறேன். சுருக்கமாகச் சொன்னால் என்னைப் படம் பிடித்த பாளையங்கோட்டைச் சிங்காரம் பட்டபாட்டைத் தமிழ்ப்பாஷையினால்கூட வர்ணித்துவிட முடியாது. அவன் படம் பிடித்த பிறகு நூறுதரம் எங்கள் வீட்டை வலம் வந்திருக்கிறான். ஆயிரந்தரம் பாட்டி, தாயார் முதலியோரில்லாத போது வீட்டுக்கு வந்து படம் சம்பந்தமாகப் பேசுவது போல் என்னிடம் பேச முயன்றிருக்கின்றான். லக்ஷம் தரம் தாயார் வரட்டுமென்று கூறிக்கொண்டு வீட்டு வாயிலில் உட்கார்ந்து வீட்டுக்குள்ளேயே கண்ணை பெறிந்து கொண்டிருந்திருக்கின்றான். கோடித் தரம் பாட்டியோடு பேசும் போது என் பெயரை உச்சரித்திருக்கின்றான். ஆ! ஆ! அவன் பட்ட பாட்டை எத்தனை நாளானாலும் சொல்ல முடியுமா? ஒரு நாள் தாயார் பாட்டியெல்லாம் வெளியே போவது வரையிலும் எதிர் வீட்டில் காத்திருந்து விட்டு, பிறகு எங்கள் வீட்டை நாடி, படம் சம்பந்தமாக பேசுவதுபோல் தொடங்கி என் கருணையை வேண்டி ஏதேதுவோ புலம்பிக் கண்ணீர் வடிக்கத் தொடங்கி விட்டான். அவன் தன்னை மறந்து புலம்புவதைக் கண்டதும், எனக்குக் கோபம் வருவதற்குப் பதிலாக அவன் மேல் கருணை பிறந்தது. ஆதலால் கடுமையாக எதுவும் சொல்லாது, கதவை மூடிக் கொண்டு தப்பி விட்டேன். "அடடா இவனிடத்தில் என் படம் பிடிக்கச் சொன்னோம் என்றாகி விட்டது எனக்கு. இந்த சிங்காரம் மற்றொரு தரம்—ஒரு நாள் நண்பகல்—ஒரு கடிதத்தைத் "காதுமாறாக" எழுதி என்னிடம் கொணர்ந்து தந்தான். அதில் நான் அவனை மணந்து கொள்ளா விட்டால் எப்படியாவது என்னைக் கொன்று விட்டு அவனும் இறந்து போவதாக என்னென்னமோ வரைந்திருந்தான். அக் கடிதத்தைப் பாட்டியிடம் காண்பித்தேன். பாட்டி அதிக சாமர்த்திய முடையவரல்லவா? அவர் ஒன்றும் கடுமையாக நடந்து கொள்ளாது, "இப்படித் தானிருப்பார்கள் ஆடவர்கள் ஒரு பெண் கையில் சிக்குவது வரையிலும். அப்பால் நாயே பேயே என்று மிருக பாடம் படிக்க தொடங்கி விடுவார்கள்" என்று பதில் கூறிவிட்டு என்னைக் கல்யாணஞ் செய்து கொடுத்துவிடத் தீர்மானித்தார்.

இந்த சிங்காரந்தான், கூனியூரில் கல்யாணத்தின் போது வேண்டிய குறிச்சிகளைத் தந்தாரே பாலையாபிள்ளை; அவரது சகோதரியைக் கட்டியிருக்கிறார். இப்போது சுமார் நாலைந்து குழந்தைகளின் தந்தையாகி வீர நல்லூரில் சித்திர ஆசிரியராக இருந்து வருகிறார். கல்யாணத் தன்று அவரும் பிரசன்னமாகி யிருந்தாரன்றோ. இப்போது என்னைக் கண்டால் வெட்கித் தலை குனிந்து போய் விடுவது வழக்கம்.

கதையைச் சுருக்கி விடுகிறேன். கல்யாணப் பேச்சுத் தொடங்கியபின் நாடி வந்த நூற்றுக் கணக்கான ஜாதகங்களில் இரண்டிலாவது எந்த ஆலோசனைக் கொடுங் காற்றுக்கும் அசைய வில்லை. அவை தாயார், பாட்டி, மாமனார், மாமியார் முதலிய எல்லாருடைய வோட்டையும் பெற்றன. ஆனால் இருவருக்கு ஒரு பெண்ணைக் கொடுப்பது எப்படி? முடியாதன்றோ? ஆகவே இரு ஜாதகர்களிலும் யாருக்குக் கொடுப்பது என்ற பிரச்சினை கிளர்ந்தது. என் தாயார் கார்குறிச்சிக் காசிநாதனுக்குக் கட்டிக் கொடுக்க வேண்டு மென்று கழறினார். என் மாமனார் ஆழ்வார் திரு நகரி அமுதலிங்கத்துக்கு அளிக்க வேண்டு மென்று அறைந்தார். பாட்டியோ பகுதி இங்கும் பகுதி அங்குமாகப் பரிதவித்தார். இந்த நிலைமை என் கல்யாணத்தைச் சில மாதங்கள் நீட்டிவிடுமென்று யூகித்தேன்.

இங்கு மணமக்களைப் பற்றிச் சில வார்த்தைகள். காசிநாதன் என்பவர் சுமார் 23 வயதான இளைஞர்; பார்வைக்கு அழகாகத் தோற்றுவார். கல்யாணப் பேச்சு நடந்த காலையில் பி. ஏ. சீனியரில் வாசித்துக் கொண்டிருந்தார். அவருடைய குடும்பம் பெரிதாம். ஏராளமான சொத்து இருந்ததென்று என் தாயார் கூறினர். அவருடைய ஒரு தங்கை—சென்னையில் படித்தவளாம்—அம்பா சமுத்திரத்தில் வைத்தியம் செய்து கொண்டிருந்தாள். அவளுக்கும் என் தாயாருக்கும் மிகுந்த பழக்கம். ஆதலால்தான் அவள் சகோதரனுக்குக் கட்டிக் கொடுக்க வேண்டுமென்றாரோ என்னவோ?

ஆழ்வார் திருநகரி அமுதலிங்க மென்பவரும் ஒரு மாணவரே. அவர் B. A. தேறியிருந்தார். அவருக்கும் அதிக ஆஸ்தியிருந்ததாகப் பிரஸ்தாபம். அவருடைய உடலழகைப் பற்றியும் பழுது கூறுவாரில்லை. அவருடைய தந்தை பாரதிய நெல்லையப்ப முதலியார் ஓர் மாஜிஸ்டிரேட். அவர் இளமையில் என் மாமனோடு கல்வி கற்றவந்ததால் இருவருக்கும் அதிக நட்பு ஏற்பட்டிருந்தது. எனவே மாமனார் தம் சிநேகிதரின் புதல்வருக்குக் கட்டிக் கொடுக்க வேண்டுமென்றார். இங்ஙனம் இருவித அபிப்பிராயம் ஏற்பட்டதும் என் மாமனாருக்கும் தாயாருக்கும் இலேசாக மனஸ்தாபம் ஏற்பட்டது.

(தொடரும்)





## வண்டு விடு தூது.

ராய. சோ.

(உரிமை ஆக்கியோனுடையது.)

எவரும் விரும்ப இசையிடு வண்டே!
எழுந்துயர்ந்த
சுவருள் இருக்குமென் சுந்தரன் தன்னிடம்
தூதுசென்று,
கவரும் நினது கரும்பு, சிறையில்
கலைபயின்று,
தவரும் வியந்திட வாழுகின் றானெனச்
சாற்றுகவே!

"காந்தி கலித்துறை யந்தாதி"

சிறையுறையும் காதலி, வேறோர் சிறையில் இருக்கும் தன் ஆருயிர்க் காதலனுக்கு வண்டைத் தூதாக அனுப்புகின்றாள். சிறையில் தன் கம்பியடைப்பு அறைக்கு எதிரே ஓர் மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறாள் காதலி. அங்கு பறக்கும் வண்டுகளைப் பார்த்து, எதிரேயிருக்கும் மற்றொரு சிறையைக் காட்டி, "யாவரும் ஆசைப் படும்படி இசை பாடும் ஏ வண்டே! வானளாவி எழுந்து ஓங்கியிருக்கின்ற அம்மதில் சுவருக்குள் வீற்றிருக்கின்ற என் காதலனிடம் என்பொருட்டுத் தூதாக ஏகி, என் தவ வாழ்வை உரைப்பாயாக!" எனக் கூறுகின்றாள்.

# ஜப்பானிய மஞ்சூரியா

"ஜப்பான்—ருஷ்ய வளர்ச்சியைத் தடுக்கும் ஏகாதிபத்திய எல்லை"

என்ற தலைப்போடு டைம்ஸ் பத்திரிகையின் நிருபர் எழுதுகிறார்:—

கிழைப் பிரதேசங்களில் ஜப்பானின் வளர்ச்சி மஞ்சூரியாவில் என்ன நடக்கிறதென்பதைப் பொறுத்திருக்கிறது. ஜப்பானிய அரசியல் மஞ்சுகோவில் தன்னை ஸ்திரப்படுத்திக் கொண்டால் ருஷ்யாவின் வளர்ச்சியைத் தடை செய்யப் போதுமான எல்லையாகிவிடும். மூன்றுகோடி மக்கள் இம்மாதிரியான ஒரு நிலைமையை மஞ்சுகோவில் வரவேற்ருல் சீனம் அதை எதிர்த்து என்னதான் செய்யமுடியும்? சீன எதிர்ப்பை ஜப்பான் தேடிக்கொண்டபொழுது தனது இலக்ஷியம் முழுவதையும் பணயமாக வைத்துப் போராடியது. ஜப்பானிய குணசம்பத்தும் அரசியல் திறமையுந்தான் கோரிய இலக்ஷியத்தின் பூர்த்தியை இனி நமக்குக் காட்டும்.

பழைய மஞ்சூரியா இதற்குமுன் தன்னலத்தையே நாடிப் பொதுமக்களைக் கொள்ளையடித்துவந்த ஒரு சில படைத்தலைவர்களின் ஆட்சியில் இருந்துவந்தது. சீனத்தில் எங்கும் இருந்துவந்த அரசியல் ஊழல் அங்கும் இருந்ததில் ஆச்சரியமில்லை. சீனத்தில் பொது ஜனங்கள் முறையிட்டுக் கொள்ளுவதற்குப் பேருக்காவது ஒரு மத்திய அரசாங்கம் இருக்கிறது. மஞ்சூரியாவில் செல்வத்தைக் கொள்ளையடிக்கும் நாய்க்குடைகளான இந்த மந்தாரின் சேனையைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது.

மஞ்சூரியாவில் சட்டம் என்ற கவலையில்லை. அரசாங்கமோ தான்தோன்றி. பிறகு ஏன் கொள்ளையடிப்பதற்கு வசதி ஏற்படாது? இம்மாதிரியான இன்னும் பல ஊழல்கள் நாட்டை அன்னியர் வசம் ஒப்புவித்துவிட்டது. முக்கியமாக ஜப்பானிய உரிமையைச் சட்டைசெய்யவில்லை. அதனால் ஏற்படக்கூடிய தீமைகளைத் தீர ஆலோசிக்கும் திறமையில்லை. ஜப்பான் செய்தது சரியோ தப்போ என்று ஆராய்வதில் பயனில்லை. பொது ஜனங்களின் நிலைமைக்கும் அங்கு குடியேறிய அன்னியர்களின் உரிமைக்கும் இன்னல் செய்யும் மஞ்சூரிய அரசாங்கத்தைக் கவனிக்காமல் இருந்ததினால்தான், சீனம் அதை இழந்தது. ஏதேச்சாதிகாரம்போல் ஜப்பானியர் தங்கள் ஆட்சியை நிலைபெறுத்தியதைப் பற்றித் தர்க்கம் செய்துகொண்டு இருப்பதில் பயனில்லை. ரஷ்யாவுடன் போராடி மஞ்சூரியாவைக் காப்பாற்றியதால் ஜப்பானுக்கு அந்த நிலப்பரப்பில் உரிமையுண்டு என்பதை ஒத்துக்கொள்ள வேண்டும்.



காரைக்குடி பெண்கள் ஆஸ்பத்திரியில் டாக்டராக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீமதி ருக்மணி அம்மாள். சென்ற புதன்கிழமையன்று சென்னையிலிருந்து புறப்பட்டார். இவருக்குச் சங்கீதத்தில் மிகுந்த தேர்ச்சியுண்டு. பல பரிசுகள் பெற்றிருக்கிறார்.

—F. P. B.

ஜப்பானியர் ஆக்க வேலையைப்பெரிய தோரணையில் ஆரம்பித்துவிட்டார்கள். ஜப்பானியர் இம்மாதிரியாகப் பல அம்சங்களையும் பொருத்தி அமைக்கும் வேலையில் நிபுணர்கள். உள்நாட்டுக் கலகக்காரர்களை இவர்கள் அடக்கிக்கொண்டு இருக்கும்பொழுது, முன்பு வடக்கு மஞ்சூரியாவிலிருந்து துரத்தப்பட்ட ரஷ்யர்கள் வேறு பக்கத்தில் எதிர்க்கலாம் என்று நினைத்துத்தான் இரண்டையும் ஏககாலத்தில் தாங்குவதற்குப் போதிய வசதிகளைக் கொடுக்கக்கூடிய ரயில்வேப் பாதைகளை ஸ்தாபித்து மஞ்சூரியாவின் ஹ்ருதய நாடியைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

ஜப்பானிய அரசாங்கம் பொதுஜன அபிமானத்தை எதிர்பார்க்கிறது. இதனால் வரி விகிதங்களைக் குறைத்திருக்கிறது. பொதுஜன சமாதானத்திற்குத் தகுந்த காப்புகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஜப்பானுக்கு உட்பட்ட மஞ்சுகோ அரசியல் இதைச் சரிவர நிறைவேற்றினால் ஜனங்கள் இந்த அன்னிய அரசாங்கத்தை ஏற்றுக்கொள்ளத்தான் செய்வார்கள். இம்மாதிரியான நிலைமை நிரந்தரமாக ஏற்பட்டு விட்டால் ரஷ்ய பயம் நீங்கிவிடும்.

பொதுஜனங்களைச் சாந்தி செய்வதோடு மட்டும் ஜப்பானிய அரசியல் கொள்கை நின்றுவிடவில்லை. மஞ்சூரிய ஜப்பானின் ஒரு அங்கமாக இருந்தால் அதன் சக்தியும் செல்வமும் மேலோங்கிவிடும் என்பதை எதிர்பார்க்கிறது. ஜெர்மனி எப்பொழுதும் பிரான்ஸிற்குச் சரித்திர பூர்வமான எதிரி. அவர்கள் வேறு விதமாக இருக்க முடியாது. அதே மாதிரிதான் ஜப்பானும் ரஷ்யாவும். முக்கியமாக ரஷ்யா பொதுவுடைமைக் கொள்கையை ஏற்றுக்கொண்ட பிறகு, முதலாளித்துவத்தையும், சாம்ராஜ்யத்தையும் தனது ஆதர்சமாகக் கொண்டிருக்கும் ஜப்பான் வேறு என்னவாக இருக்கமுடியும்? ரஷ்யாவுடன் எந்தச் சமயத்திலும் போராடத் தயாரான ஒரு சேனை இருக்கவேண்டும் என்பது ஜப்பானிய இராணுவக்கொள்கை. ஜப்பான் சர்வதேசச் சங்கத்திலிருந்து விலகிக் கொண்ட பிறகு இது மிகவும் அவசியம் என்று சொல்லவேண்டியதில்லை.

ஜப்பான் தனக்கு இருக்கக்கூடிய தீவுகளில் எல்லாம் மிகவும் வளர்ந்துவிட்டது. அதன் அரசியல் சக்தி உலகத்தில் முக்கியமானவற்றில் ஒன்றாக இருக்கவேண்டுமானால் இன்னும் இடம் வேண்டும். மஞ்சூரியா சகல வளங்களும் பொருந்திய நாடு. தங்கம் அங்கு இன்னும் ஏராளமாக இருந்து வருகிறது. விவசாயத்திற்கு ஏராளமாக இடம் இருக்கிறது. அரசியல் மனமாற்றங்களைக் கவனியாது விவசாயத் தொழிலாளிகள் ஏராளமாகச் சீனத்திலிருந்து இங்கு வந்துகொண்டிருக்கிறார்கள்.

மஞ்சுகோவில் தங்கள் பொருளாதார இலக்ஷியத்தைப் பூர்த்தி செய்வதற்கு ஜப்பானியர் உழைத்து வருகிறார்கள். பழைய அரசியல் வீணாக்குவதற்குச் செல்வத்தைச் சேகரித்தால், விஞ்ஞான வளர்ச்சியும் அரசியல் பலமும் உள்ள அரசாங்கம் என்னதான் செய்ய முடியாது? முக்தன் (Mukdan) என்ற விடத்தில் அமோகமான பொருட்செலவில் யந்திரங்கள் நிறுவப்பட்டு வேலை நடந்து வந்தன. அவையாவும் யுத்த முஸ்தீப்புக்களுக்கு வேண்டிய ஆயுதங்களைத் தயார் செய்வதற்குத்தான். இவ்வளவும் ஜப்பானிய மஞ்சுகோப் போராட்டம்' வந்தவுடன் உபயோகமற்றதாகி விட்டன. மஞ்சூரியாவிற்கு இராணுவ இலாகா ஒரு பெருத்த நஷ்டத்தைத்தான் தந்தது. ஜப்பானியர் மஞ்சூரியாவை ஒரு செழிப்புள்ள நாடாக்க முற்பட்டு நிற்கின்றனர். அந்த வருமானத்தின் ஒரு பகுதியை ஜப்பானிய யுத்தத் தளவாடங்களுக்கு உபயோகப்படுத்துவார்கள். இந்தச் சேனை மஞ்சுகோவைப் பாதுகாக்க உபயோகப்படுத்தப்படும். இந்தத் தளவாடம் ரஷ்யாவிற்கு எதிர்ப்பாக ஜப்பானிய எல்லைப்புறத்தைப் பாதுகாக்கும். மஞ்சுகோ செழித்தால் ஜப்பானுக்குப் பொருட்செலவில்லை. ஆனால் மஞ்சூரியாவை செழித்த நாடாக்குவதில் ஜப்பானியருக்குப் பல நன்மைகள் இருக்கின்றன. ஜப்பான் நடைமுறைக்குப் பொருந்திய படி தான் கோரியதை தன் முழு உள்ளத்துடனும் செய்து வருகிறது என்பதை அதன் திட்டத்திலிருந்தே தெரிந்துக் கொள்ளலாம்.

'எல்லோரையும் தாராளமாக வரவேற்பது' என்பது மேல்நாட்டு அரசியல் வாதிகள் கீழைப்பிரதேசங்களில் தங்கள் வர்த்தகத்தைப் பெருக்குவதற்குச் சொல்லிக்கொண்டு இருக்கும் அரசியல் பேச்சு. இந்த வித்தைகள் எல்லாம் சீனத்திலும் ஜப்பானிலும் பலிப்பதே கிடையாது. மஞ்சுகோவில் இந்த வார்த்தைக்கு மதிப்பே கிடையாது. சீனத்து வியாபாரிகள் ஜப்பானியக் கண்காணிப்பில் தான் வர்த்தகம் செய்து வருகிறார்கள். அவர்களால் அன்னிய நாட்டுச் சரக்குகளை வாங்கமுடியாது. ஏன் என்றால் இம்மாதிரியான சாமான்களை ஜப்பானே மலிவாகத் தயாரிக்கிறது.

வியாபாரமும் நாட்டின் செழிப்பும், உயிர்ப் பாதுகாப்பும் ஜப்பானிய இராணுவத்தைப் பொறுத்துத்தான் இருந்து வருகிறது. இதனால் ஜப்பானியப் பொருள்களை வாங்காமல் இருக்க முடியுமா? மேலும் மஞ்சுகோ அரசாங்கமே சில அன்னிய நாட்டுச் சாமான்கள் வியாபாரத்தில் ஏகபோக உரிமையை வகிக்க நினைக்கிறது. ஜப்பானிய ஆதிக்கத்தில் அன்னிய நாட்டு உடன்படிக்கையை மஞ்சுகோ அரசியல் ஒப்புக் கொண்டு விட்டதால் இப்பொழுது அன்னிய நாட்டுச் சரக்கு இறக்குமதியைப் பற்றிய தனது கொள்கையைக் காண்பிக்க உரிமையிருக்கிறதோ என்னவோ? அன்னிய நாடுகள் மஞ்சுகோவை ஒரு தனிப்பட்ட அரசாங்கம் என்று எண்ணவில்லை. அதனால் மற்றவர்களுடைய பிரதிநிதிகள் அங்கு கிடையாது. ஆனால் ஜப்பான் அன்னிய நாட்டு உடன்படிக்கையை மதிப்பதாகச் சொல்லுகிறது. மஞ்சுகோவில் இராணுவத்தின் நிரூபணம் ஏன் இதற்குத் தடையாக இருக்க வேண்டும் என்றும் அன்னிய நாட்டு அரசாங்கங்கள் கேட்கலாம். இதுதான் அன்னிய நாட்டு வியாபாரத்திற்குத் தடையாக இருந்து வருகிறது. இதை முக்கிய அரசியல்கள் கவனிப்பது நல்லது.

முதல் முதலாக மண் எண்ணை வியாபாரம் மஞ்சுகோ அரசாங்கத்திற்கு ஏகபோக உரிமையாகலாம். இன்னொன்று புகையிலை வியாபாரம். அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் இந்த வியாபாரந்தான் முக்கியமானது. இந்த இரண்டு வியாபாரத்தையும் அரசியல் ஏகபோக உரிமையாக ஆக்கிவிடப் போவதாகத் தெரிகிறது. அதில் உள்ள பங்குகளை எல்லாம் ஜப்பானிய அரசாங்கமும், மஞ்சுகோ அரசாங்கமும் பகிர்ந்துக் கொள்ளும். தனிப்பட்ட நபர்களுக்குச் சில பங்குகள் கிடைக்கலாம். அவை வெகு சொற்பமாகவே யிருக்கும்.

இன்னும் தங்கச் சுரங்கத் தொழிலும் அரசாங்கத்தின் ஏகபோக உரிமையாகி விடுமாம். ஆனால் சிற்சில நிபந்தனையின் பேரில் அன்னிய நாட்டுக் கம்பெனிகளுக்குக் குறிப்பிட்ட இடங்களில் வேலை செய்ய அனுமதிக் கொடுக்கப்படும். ஒரு புதிய சுரங்கச் சட்டம் ஜூலையிலிருந்து அமுலுக்கு வந்திருக்கிறது. அன்னிய நாட்டுக் கம்பெனிகள் இந்தச் சட்டத்தின் கொள்கையை அறிந்து கொண்டு தொழிலை ஆரம்பிக்கக் காத்திருக்கிறது. ஆனால் அரசாங்கம் நல்ல பாகங்களைத் தனக்கெடுத்துக் கொண்டு வருவாய் குறைந்து வருபவற்றை அன்னிய நாட்டினருக்குக் கொடுக்கும். ஜப்பானியர், தங்கச் சுரங்கத்திற்குப் பெயர் போன ஜோஹானஸ்பர்க்கைப் போல் அங்கும் ஒன்று சிருஷ்டித்து விடலாம் என்று மனப்பால் குடிக்கிறார்கள். இதுவரை எடுக்கப்பட்ட தங்கம் வண்டல் அரித்து எடுக்கப்பட்டது. விஞ்ஞான ஆராய்ச்சியின் பேரில்தான் இந்தத் தொழிலின் முன்னேற்றத்தைப் பற்றித் திட்டமாகக் கூற முடியும். மஞ்சுகோ முன்னேற்ற மடைந்து வருகிறது என்று தெரிகிறது. புதிய தலைநகரான ஹ்ஸிங்கிங் நகரத்தில் இருக்கும் பரபரப்பும் அவசரமும் இதை ஒருவாறு எடுத்துக் காட்டும்.

மஞ்சுகோவில் ஏற்றுமதி இறக்குமதி அதிகமாகி அன்னிய நாட்டு வியாபாரத்தைப் பெருக்கிக்கொண்டு வருகிறது. இதில் அரசாங்கம் செய்யும் பொதுஜன வசதிகள் அதிகம். ஆனாலும் புதிதாக அங்கு சென்று பார்க்கிறவர்களுக்கு 1931, 1932ல் ஏற்பட்ட தடையிலிருந்து இன்னும் பூர்த்தியாக முன்னேறவில்லை என்று படும். ஒவ்வொரு வரும் அரசியல் பொதுஜனத்தின் மனதைச் சந்துஷ்டிசெய்ய இன்னும் முயல வேண்டும் என்று உரைக்கின்றனர்.

ஜப்பானியர் மற்றவர்களுடைய நன்மையைப் பொருட்படுத்ாதவர்கள் என்ற பொதுஜன அபிப்பிராயம் இருந்து வருகிறது. ஏழை விவசாயிகள் அப்படி நினைப்பதாகத் தெரியவில்லை. கொள்ளைக்காரர்களிடமிருந்து காப்பாற்றும் ஜப்பானிய அரசியல் மீது ஒரு பாசம் இருந்து வருகிறது. வரி விகிதமும் பாதுகாப்பும் இருந்துவந்தால் புதிய அரசியலை மஞ்சுகோ விவசாயிகள் ஆதரிப்பார்கள்.

ஆனால் இப்பொழுது இருந்துவரும் நிலைமை இதைக் கொண்டுவராது என்றுதான் நினைக்க வேண்டியிருக்கிறது. படைவீரர்களின் அமுல் இரத்த வெறி கொண்டதாக இருந்து வருகிறது. அவர்கள் தங்கள் அதிகாரத்தைக் கண்மூடித்தனமாக மிகவும் அகந்தையோடும் நடத்தி வருகிறார்கள். அளவுக்குமீறிய ஜப்பானிய தேசீய அகந்தையும் சாம்ராஜ்ய மனப்பான்மையும் துணைசெய்து வருகிறது. இது ஜப்பானிய அரசாங்கத்திற்குத் தெரிந்ததே. அரசாங்கத்தின் கவலையும் அதைப்பற்றித்தான். இவை எல்லாம் நீக்க முயற்சித்தால் பொதுஜன ஆதரவு ஜப்பானிய அரசாங்கத்திற்குக் கிடைப்பதில் தடையில்லை.

தங்கள் புதிய மாகாணமான மஞ்சூரியாவை மறுமுறை நன்ருக அமைக்க ஜப்பானியர் முற்பட்டு நிற்கிறார்கள். நாணயச் செலாவாணியை ஒரு நல்ல முறையில் நடத்தவும், வியாபாரத்தையும் விவசாயத்தையும் பெருக்கவும் போக்கு வரவு சாதனங்களைப் பெருக்கவும் ஜப்பானிய அரசியல் இப்பொழுது உழைத்து வருகிறது.

வெள்ளச் சேதத்தினுல் ஏற்படும் கஷ்டந்தான் மஞ்சூரியாவிற்கு அடிக்கடி வரும் நிரந்தரமான தீமை. இதையும் தீர்த்துவைக்க முயன்றுகொண்டு இருக்கிறார்கள்.

நாணயச் செலாவாணியை ஒரு ஸ்திரமான படியில் நடத்துவதற்கு அரசாங்கம் புதிய முறைகளைக் கையாளுகிறது. வெள்ளிக்குப் பதிலாக இப்பொழுது செலவாணியாகி வரும் நோட்டுக்கள் 140,000,000 டாலர் மதிப்புள்ளது. அதற்கு தங்கமும் வெள்ளியுமாக பொக்கிஷப் பிணையங்கள் 100-க்கு 61 விகிதம் இருக்கிறது. இந்த புதிய நோட்டுகளுக்கு வெளி நாட்டிலும் உள்நாட்டிலும் நல்ல மதிப்பிருக்கிறது என்று நாணயமாற்று விகிதத்தால் அறியலாம்.

கொள்ளையிடுவது மஞ்சூரியாவில் கௌரவமான தொழில். அது தேசத்தை விட்டு அடியோடு தொலைந்து போகாது. ஆனால் இப்போது இருந்துவரும் கொள்ளைக் கூட்டங்கள் சம்பளமில்லாததாலும் சரியான தலைவரில்லாததாலும் கலைந்துபோன பழைய போர் வீரர்கள் தான். 1932 வருஷம் அவர்கள் தொகை 150,000 இருந்துவந்தது. இப்பொழுது 40,000-க்குக் குறைந்துவிட்டது. இவர்களைப் பொதுவுடைமைக் கட்சியினரும் சீனர்களும் உதவிசெய்து வருவதாகத் தெரிகிறது. இருந்தாலும் ஜப்பானிய யுத்தத் தளவாடங்கள் அவர்களைச் சிதறவடித்து விட்டது. இப்பொழுது சிற்சில பாகங்களில்தான் இருந்து வருகிறார்கள்.

சுங்கச் சாவடிகளில் வந்த வரிகளால் மஞ்சுகோவின் செல்வ நிலைமை முன்னேறிவிட்டது. 9,000,000 டாலர்கள் ஜப்பானிய தளவாடங்களுக்கு மஞ்சுகோ கொடுக்கப் போகிறது. சுங்க வரிகளின் முன்னேற்றந்தான் இதற்குக் காரணம். இத்தனை வருஷகாலமாக மஞ்சூரியாவின் ஏற்றுமதி நஷ்டக் கணக்கிலேயே இருந்து வந்தது. இதற்கு ஸோயாவின் விலை விழுந்துவிட்டது முக்கியக் காரணம். அரசியலின் உதவியினுலும் அமெரிக்க மாவு இறக்குமதியினுலும் இப்பொழுது நல்ல நிலைமை ஏற்பட்டிருக்கிறது. வியாபார நிலைமை முன்னேறுவதற்கு ஸோயா விவசாயத்தைக் குறைத்து நெல்லும் கோதுமையும் சகுபடிசெய்ய அரசாங்கம் உதவிசெய்து வருகிறது.

---

## காரைக்குடி முனிசிபல் தேர்தல்

காரைக்குடி முனிசிபாலிடியின் அங்கத்தினர் தேர்தல் அக்டோபர் 3-ந் தேதி நடைபெறுமென்றும் அபேக்ஷகர் நாமிநேஷன் பாரம் 17–9–34-ந் தேதி போடப்பட வேண்டுமென்றும் தெரிகிறது.

### பதிய சரித்திர உண்மை

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 1021 வரை ஹிந்து அரசர்களால் ஆப்கானிஸ்தானம் ஆளப்பட்டு வந்தது என்பதற்குச் சிலாசாசன ஆதாரங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்,

## ரயில் போக்கு வரவு

---

### மதராஸ்-எழும்பூர்

மெயின் லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 40 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 6 55 | மாலை 7 25 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 0 | காலை 11 55 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர் .... | மாலை 9 30 | காலை 6 5 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 35 |

கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாசஞ்சர் .... | காலை 11 15 | மாலை 2 55 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 7 30 | காலை 7 15 |

### மதராஸ்—ஸெண்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் .... | மாலை 8 30 | காலை 8 35 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 40 | மாலை 4 35 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 5 0 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| ,, எக்ஸ்பிரஸ் ... | மாலை 1 0 | மாலை 2 10 |
| ,, பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| ,, ,, .... | மாலை 9 40 | காலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 45 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 5 30 | — |
| ,, .... | 6 30 | — |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 15 |
| ப்ளூமௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 35 |



காப்டன் குக் முதன்முதல் ஆஸ்திரேலியாவில் கண்ட இடம் எவரார்டு முனை. அந்த அவருடைய ஞாபகார்த்தமாக மேற்படி ஸ்தபம் கட்டப்பட்டுள்ளது. அதனை திரு. ஜெ. ரஸ்ஸல் கிரிம்வேட் என்னும் மெல்போர்ன் நகரவாசி இங்கிலாந்துக்குப் பரிசளித்துள்ளார். அது இப்போது கப்பலில் கொண்டுபோகப் படுகின்றது. —N. I. A.



உலகப் பிரசித்திபெற்ற நயாக்ரா நீர்வீழ்ச்சி. அமெரிக்காவிலிருக்கும் இவ்வருவி 160 அடி உயரத்திலிருந்து வீழ்கிறது. முதன்முதலில் ஹெம்மபின் என்ற பாதிரியார் இதனை 1678-ம் வருடத்தில் கண்டுபிடித்தார். —N. I. A.



மியூனிச் நகரிலுள்ள ஹாப்புருஹௌஸ் தோட்டத்திலிருக்கும் ஓர் சிற்றுண்டிச்சாலை. நைஸ் நகரில் ஆகஸ்டு 7-ந் தேதி ஆரம்பித்த மோட்டார் வேகப் பந்தயம் இந்த 12-ந் தேதியோடு முடிவடைந்தது. —N. I. A.





ஆஸ்திரேலிய மிருகமாகிய ஒரு கங்காருவுக்கும், ஓர் பூனைக்குட்டிக்கும் சிறுமி யொருத்தி விருந்தளிக்கின்றாள். —N. I. A.



பிரான்ஸ் பெய்ரிட்ஸ் என்ற விடத்திலுள்ள கடற்கரையின் தோற்றம். —N. I. A.



லீப்ஜிக் நகரத்தின் காட்சி. இங்கு ஆகஸ்டு 26உ முதல் 30-ந் தேதி வரையிலும் 'மாதிரி சந்தை' யொன்று நடைபெறும்.

—N. I. A.



ஸ்வீடன் தேசத்தில் ஸ்கேனிஜ என்ற விடத்திலிருக்குந் திறந்தவெளிப் பொருட்காட்சிச் சாலையில் மரத்தாலும் நூலாலும் செய்யப்பட்ட பண்டைக்காலத்து அபூர்வப் பொருட்கள் சமீபத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டன. —N. I. A.




## ரங்கம்மாவின் நவபாக மான்மியம்

(இ. சிவம் எழுதியது)

—‡—

பெரும்பழஞ்சி திருநெல்வேலிக்கும் நாகர்கோவிலுக்கும் இடையிலிருக்கும் ஓர் கிராமம். சுமாரான பணக்காரர்களால் நிறைந்த அந்தச் சிறிய வூர் ஏராளமான நெல்வயல்களாலும் பசிய செடி கொடிகளடர்ந்த புன்செய் நிலங்களாலும், ஆங்காங்கே, மா, இலுப்பை, ஆல், பூவரசு, நாகை போன்ற பெரிய மரங்களாலும் அழகுற்றிருக்கிறது. அங்குள்ள மக்கள் பெரும்பான்மையும் தத்தமக்குள்ள ஆஸ்தியைக் கொண்டு திருப்திப்பட்டு அமைதியாகக் காலம் தள்ளுபவராவர். அவர்களிடையே எப்பொழுதாவது ஐயங்கார்கள் கொஞ்சம் அத்துமீறி நடந்துவிட்டார்கள் என்கின்ற புகாரைத் தவிர வேறு ஜாதிப் பூசலோ, சமயச் சண்டையோ, பாஷைப் போரோ, பணத்தகராரோ ஏற்படுவதில்லை. பெரும்பான்மையும் எல்லா மக்களும் சகோதரர்கள் போலவே காலந்தள்ளி வருகிறார்கள். இவ்வாறு அமைதி நிலவும் கிராமங்கள் எத்தனையோ தமிழ் நாட்டில் காணப்படுகின்றன. அங்கு சீர்திருத்தவாதிகளோ அல்லது மதபோதகர்களோ சனாதன சிகாமணிகளோ தலை நீட்டாது இருந்துவிட்டால் போதும்; அவர்கள் திருப்தி, அமைதி, சந்தோஷம் குலைந்துவிடப் போவதில்லை.

இத்தகைய பெரும்பழஞ்சியில் குமாரசாமிப் பிள்ளையென்பவர் ஒருவரிருக்கிறார். அவருக்குத் திருநெல்வேலியில் உறவினர் பலரிருக்கின்றனர். அவ்வுறவினர் பட்டணப் பழக்கத்தால் கிராம வாழ்க்கைக்கு முற்றிலும் மாறுபட்ட வழக்க ஒழுக்கங்களைப் பெற்றவராவர்.

குமாரசாமிப் பிள்ளைக்கு ஒரு அருமைப் புதல்வி யுண்டு. அவள் தான் ரங்கம்மாள் என்று அழைக்கப்படுபவள். அவள் இளமையில் திருநெல்வேலியில் சென்று தங்கி, தம் சுற்றத்தாரின் உதவியால் கொஞ்சம் தமிழும் ஆங்கில அரிச்சுவடியும் கற்றிருக்கின்றாள். நன்றாக விசாரிக்கும்போது அவள் தமிழ் ஆறாவது வகுப்பில் தான் படித்திருக்கின்றாள் என்று தெரிகிறது.

இவளுக்குத் தன்னைப் பற்றிக் கொஞ்சம் கௌரவமான ஓர் எண்ணமுண்டு. வெறும் கிராமாந்தர ஜனங்களே நிரம்பிய பெரும்பழஞ்சியில், தாம் ஓர் கல்வி கற்ற வனிதை, என்பதாக ஓயாது நினைத்து வந்தாள். ஆதலால் அவளுடைய நடையிலும் உடையிலும், பார்வையிலும் பேச்சிலும், ஆடலிலும் பாடலிலும், பழக்கத்திலும் வழக்கத்திலும் ஒருவித இறுமாப்பு ரசம் இலங்கிக் கொண்டிருந்தது. அவள் தோற்றத்தில் அவ்வளவு மோசமாகவில்லை. சுமாரான அழகும், அங்கலட்சணங்களும் பெற்றிருந்தாள். எனவே அகந்தை இன்னுங் கொஞ்சம் அதிகப்பட ஏதுவாயிற்று.

இவளுக்கு வயது 15 ஆனதும் குமாரசாமிப் பிள்ளை கல்யாணம் பேசலானார். ஏதோ அவள் படித்திருக்கிறாள், அழகாயிருக்கிறாள் என்ற காரணம் பற்றி உண்மை தெரியாத பல கிராமாந்தர ஜனங்கள் அவள் ஜாதகத்தை நாடினார்கள். பெருமடை, சிறுபழஞ்சி, பத்தமடை, வள்ளியூர், நாங்குநேரி, மஞ்சங்குளம், மறவர்குறிச்சி, குறிச்சி, களக்காடு, திருக்குறுங்குடி முதலிய ஊர்கள் அவளை நாடியவற்றுள் சிலவாம். குமாரசாமிப் பிள்ளை, இவ்வாறு பல "மாப்பிளைத் தாங்கள்" வந்ததும் வெகுவாக யோசித்தார். ரங்கம்மாளுக்கோ வந்த சந்தோஷத்திற்கு அளவில்லை. இருதயம் உடைந்து நெஞ்சையும் துளைத்துக்கொண்டு வெளி வந்துவிடும்போல் தோற்றிற்று அவளது உள்ளக் கிளர்ச்சி.

கடைசியாகக் குமாரசாமிப் பிள்ளை தம் ஆசைப் புதல்வியை வள்ளியூரில் கனகசபாபதிப் பிள்ளையின் குமாரன் வடிவேல் என்பவருக்குக் கல்யாணம்செய்து கொடுத்தார். காரணம், வடிவேல் நாங்குநேரிப் பள்ளிக்கூடத்தில் ஏழாவது

வகுப்பு வரையிலும் பயின்றிருந்தானென்பதும், கொஞ்சம் ஆஸ்தியுடையவனாக விருந்தானென்பதும், இளமையும் சமாரான அழகும் பெற்றிருந்தானென்பதுமாம். வடிவேலினுடைய தாய் தந்தையரும் சுற்றத்தாரும் ரங்கம்மாளை மணாக்க வெகுவாகக் குதூகலமடைந்தனர். ரங்கம்மாள் கல்யாணத்தன்றும் அதற்கப்பாலும் காண்பித்த அகந்தைச் செயல்கட்கு அம்மம்மா! அளவுண்டா? அவள், தான் ஓர் பெரிய 'நாகரிகி' என்றும், தனக்குச் சிறிதும் சமமில்லாத ஏதோ ஒரு அநாகரிகர்களிடம் கலந்துக் கொள்ளவேண்டி வந்துவிட்டதென்றும் எண்ணியிருந்தாற்போல நடந்துக் கொண்டாள். அதனை ஒருவரிருவர் அறியாமலில்லை; ஆனால் புதுப்பெண் என்ற முறையில் எவரும் அவ்வளவாகப் பொருட்படுத்தாது போயினர்.

* * *

கல்யாணமாகி இரண்டு நாளானதும் வடிவேலின் தாயார் மருமகளிடம் வந்து, அன்பாக, "அம்மா இன்று நீ சமையல் செய்கிறாயா? பட்டண நாகரிகம் தெரிந்த உன் கையினால் சமையல் செய்து உண்ணவேண்டுமென்று எல்லோரும் ஆசைப்படுகிறார்கள். மேலும் நீ நன்றாக ஏதோ பாகசாஸ்திரமோ என்னவோ கற்றிருக்கிறாயாமே? உன் தாயார் உன் சமையற் கலையறிவைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்தாள். நீயும் கல்யாணத்தன்று செய்யப்பட்ட கறி வகைகள், சாதம் முதலியவற்றைப்பற்றிப் புகார் கூறினாயாம். வடிவேலுக்கும் உன் கையால் சாப்பிடுவதற்கு ஆசை. மேலும் நீதானே இனிச் சமையலை நடத்தவேண்டும்? அதனை இன்று தானே தொடங்கிவிடு" என்றாள். மாமிவந்து தன்னைப் புகழ்வதைக்கேட்டதும் ரங்கம்மாள் சாலவும் மகிழ்ந்து "நல்லது செய்கிறேன்" என்று புன்னகை மின்னல் அகந்தை குடியிருந்த அதரங்களில் தோன்றிமறையக் கூறினாள்.

அதன்மேல் மாமியார் பக்க உதவியாயிருக்க, பற்பலவிதக் காய்கள், கீரைகள், எண்ணெய், உப்பு, மிளகாய், புளி முதலிய பல பொருட்கள் சமையற்கட்டுக்குள் கொண்டு போகப்பட்டன. அரிசியும் சென்றது. அப்பால் மாமியும் பக்கத்து வீட்டுச் சில பெண்களும்—பாவம்!—பட்டணத்தில் படித்த ரங்கம்மாள் எப்படிச் சமைக்கின்றாளென்று பார்க்க வேண்டுமென்று அங்கு வந்துகூடினர். அவர்களைப் பார்த்தாள் ரங்கம்; மனதில் வந்த தற்பெருமைக்கு அளவில்லை. உடனே தன்னோடு பெரும் பழஞ்சியிலிருந்து கொண்டு வந்திருந்த ஒரு பாக சாஸ்திரத்தை எடுத்து வந்தாள். அதற்குத் தொண்ணூற்றென்பது வயதிருக்கலாம். தோற்றத்தால் ஏதோ குப்பைத் தொட்டியிலிருந்து எடுக்கப்பட்டது போலிருந்தது. அச்சுப்பிழை ஆசிரியர் பிழை, அச்சிடுவோர் பிழை காகிதம் செய்வோர் பிழையெல்லாம் வீடுகட்டி அதில் குடியிருந்தன. அதனை ஒரு பக்கத்தில் விரித்து வைத்துவிட்டு ஒரு தராசு, சில ரூபாய்கள், தம்பிடிகள் உழக்கு, படி, கால் அணுக்கள் முதலியவற்றை எடுத்துவந்து பக்கத்தில் வைத்தாள். நாட்டுப்புற ஜனங்களாகிய வள்ளியூர்ப் பெண்கள் சமையல் செய்வதற்குத் தராசு, உழக்கு, படி ரூபாய், காலணா, தம்பிடி முதலியவைகளைக் கொண்டுவருவதைக் கண்டதும் வாய் பிளந்துபோனார்கள். அவர்கள் தம் ஜன்மத்தில் கூடவும் தராசினால் சமையல் செய்யலாமென்று நினைத்ததில்லை; கேட்டதில்லை; யூகித்ததுமில்லை. வடிவேலோ தனக்கு வாய்த்த மனைவியிடம் சொல்லமுடியாத பாசத்தைப் பார்வையால் தோற்றுவித்தான். மாமியாகிய முத்தம்மாளுக்கும் (வடிவேலின் தாயார்) உள்ளப்பூரிப்பு—மமதை—வந்து கன்னத்தைக் கிழித்தது. எனவே அவள் தம் பக்கத்து வீட்டுப் பாக்கிய லட்சுமியோடு சமையற் கட்டினுட் கார்ந்து மருகியின் சமையற்றிறத்தில் கண்ணோட்டம் போடலானாள்.

[இதற்கிடையில் ஓர் அந்தரங்கம். ரங்கம்மாளுக்கு, தடபுடல் காண்பித்தாலும் நன்கு படிக்கத் தெரியாது. அன்றி சமையல் செய்யவுமறியாள். எப்பொழுதோ பாகசாஸ்திர மொன்றைப் பார்த்திருக்கிறாளே அல்லாமல் அதன் வைத்தியக்காரத் தனத்தை நடைமுறையில் கண்டறிந்ததில்லை. இந்த நிலைமையில் தான் பழம் பாகசாஸ்திரத்தால் சமையல் செய்து விடலாமென் றெல்லாம் நாட்டுப்புற ஜனங்களிடம் செப்பிடு வித்தை காண்பிக்கின்றாள்.]

ரங்கம்மாள் அடுப்படியை நண்ணியதும் மாமியிடம் "அம்மாமி நான் புளியோதரை செய்யவா? கத்திரிக்காய்ச் சாதம் செய்யவா? எலுமிச்சம்பழச் சாதம் செய்யவா? பருப்புச் சாதம் செய்யவா? சம்பாச் செய்யவா? புலவுச் சாதம் செய்யவா? மிளகுச் சாதம் செய்யவா? தாளித்த அன்னம் செய்யவா?................"

இப்படியே புஸ்தகத்தைப் பார்த்துக்கொண்டு இருபது முப்பது சாதங்களின் பெயரைக் கூறினாள். முத்தம்மாள் கனவில்கூட அந்த ஜாபிதாவைக் கேட்டதில்லை. ஆதலால் சங்கித்து ஏதேனும் தப்பாகக் கூறினால்



ரங்கம்மாள் தாளித்த அன்னம் செய்வதற்கு மிளகாய் நிறை பார்க்கிறாள்.



மருகி என்னவாவது நினைத்துக் கொள்வாளோ வென்று எண்ணி வெகுவாக யோசித்து நிற்க, பக்கத்து வீட்டுப் பாக்கியலட்சுமி கடைசியில் சொன்ன தாளித்த அன்னத்தைச் செய்யச் சொன்னார். உடனே புன்முறுவலோடு ரங்கம்மாள் 'அதைச் செய்வதுதான் எளிது; அதுதான் சாத வகைகளில் மிகவும் மோசமானது, அநாகரிகர்களாகிய உங்கட்குத் தாளிதம்தான் தெரியும் போலிருக்கிறது." என்று கூறி புத்தகத்தில் அதற்கான பக்கத்தை எடுத்துப் பரப்பினாள்.

பின் அடுப்பில் உலை (தண்ணீர்) வைக்கப்பட்டது. அதற்காக ஏதோ ஒரு படியை எடுத்துத் தண்ணீரை அளந்து, அதில் ஒரு குச்சியை விட்டு ஆழம் பார்த்து "எஞ்சினீயரிங்" நடாத்தினாள். அவ்வேலை பார்ப்பவர்கட்குச் சிறிது புதுமையையே நல்கியது. அதன்மேல் ஒரு கடிகாரத்தை நோக்கிக் கொண்டு 15 நிமிஷநேரம் தவமிருந்தாள். ஏனெனில், 15 நிமிஷம் பொறுத்துத்தான் அரிசியைக் கொட்டவேண்டுமென்று பாகசாஸ்திரத்தி லெழுதப்பட்டிருந்தது. அவ்வாறு கால் மணி கடந்ததும், மாமியிடம் அரிசி எங்கே என்றாள். முத்தம்மாள் செந்தில்நாயகம் என்ற அரிசியைக் கொடுத்தாள். (செந்தில்நாயகம் திருநெல்வேலியில் வழங்கப் பெறும் நல்ல அரிசிகளில் ஒன்று) ரங்கம் அதனைப் பார்த்துவிட்டு "இது இலுப்பைப் பூவா, ஊசிய, ஒசிச் சம்பாவா, கலியங்கமா, கனகமா, கலப்பா...."இப்படிப் பாக சாஸ்திரத்திலிருந்து ஒரு பக்கத்தை 10 நிமிஷம்கொண்டு படித்து முடித்தாள். (அப்போது உலையின் கதி என்னவா யிருக்கும்?) மாமியார், மருகி வாசித்த ஜாபிதாவில் செந்தில் நாயகம் இல்லாதிருப்பதைக் கண்டு "ஒன்றுமல்ல" வென்றாள். உடன் ரங்கம் முணுமுணுத்துக் கொண்டு பதிமூன்றுதரம் தண்ணீரில் அரிசியைக் கழுவினாள். அதற்குச் சுமார் 10 நிமிஷமாவது ஆகியிருக்கலாம். அதன்மேல் புத்தகத்தைப் பார்த்துக்கொண்டு பானையில் கொட்டினாள் அரிசியை. பானையிலோ வைத்த தண்ணீரில் காற்பாகம் கூடவில்லை. பின் சற்றுநேரம் பொறுத்து, புஸ்தகப்படி அரிசியை 12 தரம் "துழாவி" பால் விட்டாள். அப்பால் கஞ்சியை வடிக்க முயன்றாள். அந்தோ! பானையில் கஞ்சியுமில்லை, காடியுமில்லை. அரிசி வேகக் கூடவில்லை. புகை மெல்ல எழும்ப ஆரம்பித்திருந்தது. எனவே புகையை அவிக்க ஏதேனும் வழியிருக்கிறதா வென்று புத்தகத்தைப் பார்த்தாள். ஆனால்—ரங்கத்தின் பாகமுறையை ஆசிரிய சிகாமணி தெரிந்திருக்க மாட்டா ரல்லவா?—புகையை அணைக்கும் வழி குறிப்பிடப்படவில்லை.

* * *

பின் ரங்கம்மாள் எப்படியோ வடித்துக் கொட்டிய அரிசியைப் புகையோடு வெளியே எடுத்துத் தட்டினாள். அதன் மேல் புத்தகத்தை நோக்கினாள். "$1\frac{1}{4}$ படி நெய்யை வார்த்து அடுப்பிலேற்றித் தீயை யெரித்து நெய் கொதித்து வரும் போது இரண்டு கைப்பிடி வெங்காயம் உரித்து அரிந்துகொண்டு $1\frac{1}{2}$ ரூபாய், கிராம்பு, கனித்தனி 1 ரூ. மூன்றுடனே சேர்த்து அவை சிவந்து வருகையில் தண்ணீர் விடவேண்டும்" என்றிருந்தது. ரங்கம்மாளுக்கு நெய்யைப் பானையில் விடுவதா நெருப்பில்விட்டுப் புகையும்போது சாதத்தைக் காண்பிப்பதா வென்பது விளங்கவில்லை. பன்முறை திருப்பித் திருப்பிப் படித்தாள். விஷயம் புரிந்தபாடில்லை. என்றாலும் நிதானித்து, பானையில் போட்டாள். அதில் மூன்று ரூபாய் போடப்படவேண்டு மென்றிருந்ததின் அந்தரங்கம் விளங்கவில்லை. ஒருகால் வெள்ளிச்சத்து ஏறவேண்டுமென்பதா யிருக்கலாமோ வென்று யூகித்தாள்.

அப்பால் புத்தகத்தை நோக்க, "$1\frac{1}{2}$ ரூபாய், ஏலக்காயும் 5 பைசா, கறுவாப் பட்டை" போடவேண்டுமென்று சொல்லப் பட்டிருந்தது. அவ்வண்ணமே அவள் சாதத்தில் மீண்டும் $1\frac{1}{2}$ ரூபாய், 5 பைசா, கொஞ்சம் ஏலக்காய், கறுவாப்பட்டை ஆகியவற்றைப் போட்டாள். மேலும் புத்தகத்தைப் பார்த்தாள். அதில் "காய்ச்சின பாலை ஒரு படி அதன் மேல் ஊற்றி நாலு முழ வெள்ளைக் குட்டையை நனைத்துப் பிழிந்து பானையின் தங்கில் வட்டமாகச் சுற்றிவைத்து மூடியால் அழுத்தி நெருப்பில் வைக்க ஆவி வெளிவரும் போது இழக்கவேண்டு"மென்றிருந்தது. இந்தச் சடங்குகளை யெல்லாம் செய்து முடித்தாள் ரங்கம். ஆனால் இழக்கவேண்டு மென்பதின் அர்த்தம் புரியவில்லை. அதோடு, குட்டையும் சரியாக நான்கு முழத்தில் கிடைக்கவில்லை. இருந்த மூன்றரை முழத்தையே சமாளிக்கவேண்டி யிருந்தது. அதனால் சமையல் எப்படியாகுமோ என்ற சந்தேகம் பெரிது பெரிது!

கதையைச் சுருக்குவோம். ரங்கம்மாள் மேற் கூறியவாறு என்னென்ன வழிகளிலோ சாதத்தையும் சில கறிகளையும் குழம்பையும் சமைத்து முடித்தாள். புத்தகத்தில் பல அச்சுப் பிழை, கம்பாசிட்டர் பிழை, ஆக்கியோர் கண் மூடித்தன மாகியவை மல்கியிருந்ததால் பல பைசாக்களையும் ரூபாய்களையும், பித்தளைப் படிகளையும் (எடை) யும் கறி குழம்புகளில் போட்டு, பைசாக் குழம்பு, படிக் கூட்டு, ரூபாய்ப் பொரியல் என்றழைக்கத் தகுந்த முறையில் ஆக்கிவிட்டாள். சுருக்கிக் கூறினால் பிற்பகல் 3 மணிச் சுமாருக்குச் சமையல் முடிந்தது. அப்போது ஒவ்வொருவருக்கும் எவ்வளவு பசியிருந்திருக்குமென்று கூறவேண்டுமா? வடிவேல் பசியால் துடித்தான்; என்றாலும் புதுப் பெண்ணின் செயலல்லவா............... பொறுமை நிலவிற்று.

இறுதியாக 3–30-க்கு புது மாப்பிளையென்ற முறையில் அவனுக்கு முதலில் சாதம் போடப்பட்டது. அவன் மிகுந்த களிப்புடன் பலகை யொன்றில் உட்கார்ந்தான். மணமகள் நாகரிகமாக அசைந்தாடி இலைபோட்டுச் சாதம் பரிமாறினாள். சாதத்தின் லட்சணமோ சொல்லமுடியாது. புகை, கரி, வெங்காய நாற்றம், கறுவாப்பட்டை வாடை, (குச்சுகள்) முதலிய வற்றால் ஏதோ லேகியம் போல், என்னவோ ஒரு நிறத்தில் காணப்பட்டது. என்றாலும் "நாகரிகி" ஒருத்தி, சாஸ்திரப்படி, மணி பார்த்து, எடை பார்த்து, அளந்து, சமைத்ததைக் குறை கூறினால் "பட்டிக் காட்டான்" என்று இகழப்பட்டுவிடுவானோ வென்று பயந்துக்கொண்டு, மருந்துட் கொள்வதுபோல் சில கவளங்களை விழுங்கினான். பாவம்! எப்படியோ அவை அவன் வயிற்றுக்குள்ளும் போயின. ஆனால் நான்காவதொரு உருண்டை தொண்டையை அடைந்ததும் மேலும் வாராமல் கீழுமிறங்காமல் பிடிவாதம் செய்யத் தொடங்கியது. காரணம் அதில் ஒரு காலணா இருந்து குரல் வளையில் சிக்கிக் கொண்டதென்பதாம். அதனை அவன் எவ்வளவோ "முக்கிமுயன்று" விழுங்கப் பார்த்தான்; கூடவில்லை. மூச்சுத் திணறிற்று. கண் பிதுங்க ஆரம்பித்தது. நெஞ்சு

உடைத்து விடும்போல் தோற்றிற்று. அவற்றின் அறிகுறியாக ஒருவிதமான சத்தம் வெளிப்பட, அவ்வபாய நிலைமையைக்கண்டு, தாயார், பாக்கியம் முதலிய பலர் ஓடி வந்தார்கள். ரங்கமும் திகைத்



தொண்டை விக்கிக்கொண்ட வடிவேல் தத்தளிக்க, தாயார் பாக்கியலட்சிமி ஆகியோர் ஓடி வருகின்றனர்.

துப் போனாள். முத்தம்மாள்—நீண்ட நேரமாக மருமகளின் சமையலில் சிறிது சிறிதாக எரிச்சலும் வெறுப்பும் கொண்டிருந்தவள்—"அடி சண்டாளி! என்னென்னமோ புகையையும் செம்பையும் பித்தளையையும் வெள்ளியையும் போட்டுக் கலப்பு உலோகம்செய்து அரிசியிலேற்றி என் புதல்வனைக் கொல்கின்றாயே—பாவி! இதுவா உன் சமையல் திறம்? இதனையா உன் தாயார் புகழ்ந்தாள். எவ்வளவு நெட்டைத் தியல் கொட்டி விட்டாய்?" என்று புலம்பிக்கொண்டு ஓடிவந்து மகனைப்பிடித்து "அப்பா அப்பா உனக்கு என்ன செய்கிறது?" என்றாள். வடிவேலனால் பேசவே முடியவில்லை. கை கால்களைப்போட்டு அடித்தான். இப்படி சாப்பிடப்போய் மூச்சுத் திணறும்படியான அபாய நிலைமை ஏற்பட்டதும் ஒரு கிழவி ஓடி வந்து தன் விரலொன்றை வடிவேலன் வாயில் நுழைத்தாள். ஒரு வாந்தி! வெளியே விழுந்தது ஒரு ரூபாய், இரண்டு பைசா, ஒரு காலணா, ஒரு கருவாப்பட்டைத்துண்டு, கொஞ்சம் சாதம் எல்லாம்! அதேபோது ஒரு பெருமூச்சும் விட்டான் வேலன். அவன் கண்களிலிருந்து வடிந்தது உழக்கு ஜலம்..........கொஞ்ச நேரம் பேசவே முடியவில்லை. பின் எழுந்து சாஷ்டாங்கமாக மனைவிமுன் வீழ்ந்து "போதுமம்மா உன் அபூர்வச் சமையல் முறை! ஏதாவது பட்டணவாசிகட்கு இப்படிச் சமைத்துக் கொடு. எங்களைப்போன்ற கிராமாந்தர வாசிகட்கு இந்த உயர்ந்த சாதலேகியம் தேவையில்லை. பாவி! ரூபாயாக ஏழேகால், காலணாவில் 13, பைசாவில் 14 ஆகியவற்றோடு நான்கு ரூபாய் மதிப்புள்ள நெய் அரிசி புளியையும் காலி செய்துவிட்டாயே! நளன் தங்கையே! போய்வா" என்று வணங்கினான்.

அதிகமேன்? மமதைத் தேவதையாகிய பட்டணப் பெண் ரங்கம்மாள் மறுநாள் மாட்டு வண்டி யேறி பெரும் பழஞ்சியை நண்ணினாள்.

---

## இலங்கை ரப்பர் ஏற்றுமதி

இலங்கை அரசாங்கம் இலங்கை ரப்பர் ஏற்றுமதியை அதிகப்படுத்துவதற்கு முந்தியதைவிட அதிகமான கூப்பன்கள் இந்த வருஷம் கொடுக்க உத்தேசித்திருக்கிறது.

இந்த வருஷத்திற்கு இலங்கையின் பங்கு 39,396 டன்களாக இருந்தாலும் 46000 டன்களுக்குக் கூப்பன்கள் அனுமதிக்க உத்தேசித்திருக்கிறார்கள். இதனால் உள்நாட்டு விலை விகிதம் அதிகமாகக் குறையாது என்றும் உத்தேச வியாபாரம் (Speculation) குறையும் என்றும் எதிர்பார்க்கிறார்கள்.

ஆகஸ்ட் மாதக் கடைசியில் ஏற்றுமதி செய்யப்பட்ட ரப்பர் பின் வருமாறு:—

ஜூன்: 1800 டன்கள்; ஜூலை: 4063 டன்கள்; ஆகஸ்ட்: 5369 டன்கள். டிசம்பர் மாதக் கடைசிவரை இலங்கையர்கள் ஏற்றுமதி செய்யக் கூடிய பங்கு 59,496 டன்கள். இதனால் மதம் சாரசரி 5,628 டன்கள் ஏற்றுமதி செய்யக்கூடும். இன்னும் நான்கு மாதத்திற்கு அவர்கள் ஏற்றுமதிசெய்ய வேண்டிய பங்கு 28,164 டன்கள்; இதனால் ஏற்றுமதி மாத விகிதம் 7,041 டன்களாக உயருகிறது.

பல காரணங்களால், முக்கியமாக ரப்பரின் உத்தேச வியாபாரத்தினாலும் அமெரிக்க நிலைமையினாலும் இலங்கையில் ஏற்றுமதி முதல் மூன்று மாதத்தில் குறைந்திருக்கிறது. இதேமாதிரி நிலைமை இருந்து கொண்டே போகுமானால் ரப்பர் தொழிலில் பெருத்த நஷ்டம் ஏற்படும் என்று சொல்லுகிறார்கள்.

---

## புதிய எய்ரோட்ரோம்

ஜெர்மனியிலிருக்கும் பிராங்க் போர் ஆன்மெய்ன் என்ற விடத்தில் ஆகாய விமானங்கள் வந்து தங்குவதற்கு ஒரு புதிய கட்டிடம் கட்டியாகிறது. வெர்ஸேல்ஸ் உடன்படிக்கைப்படி மேற்கு ஜெர்மனியில் இரண்டு இடங்கள்தான் இருக்க வேண்டுமாம். ஒன்று பிராங்போர்டிலும் மற்றது கொலோனிலும் இருக்கவேண்டும்.

## கத்திக் குத்தும் ஹ்ருதயத்தைப்பும்

மெக்ஸிக்கோவில் ஒரு பெண் கத்தியால் குத்தப்பட அது ஹ்ருதயத்தை ஊடுருவிப் பாய்ந்துவிட்டது. டாக்டர்கள் என்ன செய்வது என்று தோன்றாது, ஹ்ருதயத்தில் பிளந்த பாகத்தைத் தைத்து முன்போல் வைத்துக் கட்டினார்கள். இப்பொழுது அவள் குணமடைந்துவிட்டாள்!



# ரண சிகிச்சையின் அற்புதங்கள்

## விஞ்ஞான சாஸ்திரத்தின் வளர்ச்சி

### X-ரே முறைகள்

(டாக்டர் ஜான் பீட்ரிஸ் 'ஜான் ஆப் லண்டன்' பத்திரிகையில் எழுதுவது.)

ஒரு துளி இரத்தங்கூடச் சிந்தாமல் ரண சிகிச்சை செய்வதற்கு இப்பொழுது முறைகள் கண்டுபிடிக்கப் பட்டுவிட்டன. முதலில் கம்பியில்லாத் தந்திக்கும், கம்பியில்லா டெலிபோனுக்கும் கண்டு பிடிக்கப்பட்ட சாதனங்களை இப்பொழுது ரண சிகிச்சை முறைக்கும் கையாண்டு வருகிறார்கள். ஒலிபரப்புவதற்கு உபயோகப்படும் யந்திர சக்தியால் ஏற்படும் மின்சார ஒளிகளை வைத்துத் தேகத்தில் எலும்புகளைத் தவிர வேறு எந்தப்பாகத்தையும் அறுக்க முடியும். அறுக்கப்பட்ட இடம் நறுக்கென்று வெட்டுப்படாததால், வெட்டுப்பட்ட இரண்டு பாகங்களையும் ஒன்று சேர்த்துப் பொருத்தியவுடன் தானே ஒட்டிக் கொள்கின்றன. இப்படி ஆப்பரேஷன் செய்வதில் ஒரு துளி இரத்தமாவது வெளியில் சிந்துவதில்லை.

புதுமாதிரியான ரண சிகிச்சை முறை எவ்வளவோ முன்னேறி விட்டது. முன்பு பெரிய ஆப்பரேஷன்களுக்கு மயக்க மருந்து கொடுப்பது வெகு கஷ்டமானதாகவும் பிணியாளிக்கு வெகு தொந்திரவு கொடுப்பதாகவும் இருந்தது. ஈதரும்(Ether)குளோரபாரமும் முன்பு மயக்கம் கொடுப்பதற்கு உபயோகப் பட்டு வந்தன. பல் வைத்தியர்கள் காஸ் (Gas) என்ற காற்றை உபயோகப் படுத்தி வந்தார்கள். பல் வைத்தியர்கள் கையாண்டமுறை சிறு ஆப்பரேஷன்களுக்குத்தான் உபயோகப்படும். இப்பொழுதோ எனில் எத்தனையோ புதிய மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டன. இந்த மருந்தைப் பிணியாளனுக்கு முதுகுப்பில் வைத்திய ஊசி வழியாக ஏற்றிவிட்டால் உடனே அவனுக்கு நல்ல தூக்கம் வந்துவிடும். நித்திரை தெளிந்தவுடன் அவனுக்கு என்ன நடந்தது என்றுகூடத் தெரியாது.

சில சமயங்களில் இந்த மயக்க மருந்து முறைகளைக்கூட கையாள முடியாதபடி இருக்கலாம். ஆனால் இதைவிட நூதனமான முறைகள் எத்தனையோ இருக்கின்றன. கொக்கெய்ன் என்ற பொடியை வலிக்கும் பாகத்தில் செலுத்திவிட்டால் அந்தப் பாகத்திலிருக்கும் நரம்புகள் வலியை மற்றப் பாகங்களுக்குப் பரப்பாது; அதாவது பிணியாளனுக்கு வலியே தெரியாது. அந்தப் பாகம் மரத்துப் போய்விடும்.

பல் வைத்தியர்கள் இந்தக் கொக்கெய்னைப் பல் சிகிச்சை முறைகளில் அதிகமாகக் கையாண்டு வருகிறார்கள். மேலும் பெரிய ஆப்பரேஷன்களுக்கு இதை ஊசியேற்றிவிட்டால், எவ்வளவு பெரிய ஆப்பரேஷனையும் வெகு லகுவில் செய்ய முடியும். இந்த மருந்தில் ஒரு குறையிருக்கிறது. மருந்தை உபயோகித்த பாகம் மரத்துப்போய் வெகுநாட்கள்வரை அப்படியே இருந்து வருகிறது. இன்னும் சில பிணியாளர்களின் தேகத்தில் நிரந்தரமாக விஷம் ஒன்றை உண்டாக்கி விடுகிறது. ரஸாயன சாஸ்திரிகளும், வைத்திய நிபுணர்களும் இதற்கு இரண்டுவிதமான மாற்றுக்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். ரஸாயன சாஸ்திரிகள், டாக்ஸிக் (Toxic) விஷம் இல்லாத, கொக்கெய்ன் மாதிரியான புதிய செந்தூரங்கள் செய்திருக்கிறார்கள். டாக்டர்கள், அந்தப்புதிய செந்தூரத்துடன் அட்ரினலின் (Adrenalin) என்ற மருந்தை சிறு சிறு துளி உபயோகித்தால் மயக்கம் வெகு நேரம் நீடித்திருக்கும் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். அட்ரினலின் என்பது இரத்தத்திலிருந்து துர்நீரான மூத்திரத்தைப் பிரிப்பதற்கு ஏற்பட்டிருக்கும் ஒரு உறுப்பின் பக்கத்திலிருக்கும் காளை(Gland)யிலிருந்து எடுக்கப்படுகிறது.



டெல்லிச் சட்டசபையை விட்டு நீங்கும் கனம் ஆர். கே. ஷண்முகம் செட்டியார், கே. ஸி. ஐ. இ. அவர்கள் சென்னைக்கு வந்தபொழுது ஒரு விருந்தளிக்கப்பட்டது. படத்தில் திரு. செட்டியார், ராவ்பகதூர் பன்னீர்செல்வம், கனம். பி. டி. ராஜன், திரு. கே. வி. ஏ. எல். அழகப்பச் செட்டியார் முதலியோர் காணப்படுகிறார்கள்.

—P. P. B.

தேகத்தின் சதைப் பாகங்களில் இதை ஊசி ஏற்றுவதற்குப் பதிலாக முதுகுத் தண்டிலிருக்கும் நரம்புகளைச் சுற்றியிருக்கும் ஜலபாகத்தில் ஊசியேற்றிவிட்டால் முதுகுத் தண்டே மரத்துவிடும். இதனால் தேகத்தில் ஏறக்குறைய முக்கால் வாசிப் பாகங்களில் வலி தெரியாமலாக்கி விடலாம். இந்த முறை வயோதிகர்களுக்குக் கையாளப்பட்டு வருகிறது.

வலியின்மையும் இரத்தம் சிந்தாமையுந்தான் ரணசிகிச்சை முறை வளர்ச்சியின் வெற்றி என்று சொல்லலாம். பாஸ்டூர் (Pasteur) என்ற பிரஞ்சு விஞ்ஞானி, பாலில் உறையேறிப் புளிப்பதைப்பற்றி ஆராய்ந்து, இதற்கு ஓர்வித பரமாணுக்கள் எங்கும் இருப்பதுதான் காரணம் என்று கண்டுபிடித்தார். இங்கிலாந்தில் லிஸ்ட்டர் என்ற அறிஞர் இதேவிதக் கிருமிகளினால்தான் காயங்களின் இரத்தத்தில் விஷக் கலப்பு ஏற்படுகிறது என்றும், அது பிணியாளனுடைய உயிருக்கே அபாயகரமானது என்றும் கண்டுபிடித்தார்.

பிணியாளனுக்குச் சிகிச்சை செய்யும் அறையிலிருக்கும் காற்றிலும் பிணியாளனுடைய சிகிச்சை செய்ய வேண்டிய பாகத்தையும் மாற்று மருந்தின் உதவியால் அந்தப் பாக்டீரியா என்ற கிருமிகள் இல்லாமல் ஆக்கிவிடலாம் என்று கண்டுபிடித்தார். இந்த முறை அவருக்கு வெற்றியைத் தந்தது. ஆனால் தற்கால விஞ்ஞான ஆராய்ச்சி பாக்டீரியாக்களை கொதிக்கும் வென்னீரினால் வெகு எளிதாகக் கொன்றுவிடலாம் என்பதைக் கண்டுக்கொண்டது. ஆப்பரேஷன் கருவிகளை வென்னீரில் கொதிக்கவைத்து, வென்னீரால் சிகிச்சை செய்ய வேண்டிய பாகத்தைக் கழுவுவதால் ரத்தத்தில் விஷக்கலப்பு ஏறி பிணியாளிக்கு அபாயம் நேரிடாது.

உடலிலே பாக்டீரியாக்களைக் கொல்லக்கூடிய மருந்துகளை ஊசியேற்ற முடியாது. தேகத்திற்குப் பாக்டீரியாக்களைக் கொல்லக்கூடிய சக்தி இருக்கிறது. ஆனால் தேகம் அந்தத் தொழிலில் ஈடுபடுவதால் மிகவும் சோர்ந்து வலியிழந்து விடுகிறது. பாக்டீரியாலஜிஸ்டுகள் (Bacteriologists) உடலுக்கு இம்மாதிரி சக்தி குறையாமலிருக்கும்படிக்கு வழி தேடிக்கொண்டு இருக்கிறார்கள். வெற்றி பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை.

இதுவரை சொல்லி வந்தது பாக்டீரியாவினால் கெடுதல்வராமல் ரணசிகிச்சை செய்வதைப்பற்றிய நான்கு முறைகள். X-ரேயினால் இன்ன வியாதி என்று கண்டு பிடித்து அதற்கு ஏற்ற குணப்படுத்தும் முறையைக் கையாளுவதைப் பற்றி நான்காவதாகக் கவனிப்போம். வெகு காலமாக X-ரேயினால் எலும்பைத்தான் பார்க்கமுடியும் என்று நினைத்திருந்தார்கள். இப்பொழுது அப்படியல்ல. அதன் உதவியினால் பார்க்க முடியாத அங்க உறுப்புக்கள் ஒன்றுமே கிடையாது. அதிக ஒளி கொடுக்கக்கூடிய X-ரே யந்திரத்தால் இரைப்பை, குடல் முதலியன மட்டுமல்லாமல் மற்ற உறுப்புக்களையும் நன்றாகப் பார்க்க முடியும். ஹிருதயத்தையும் நுரையீரலையும் X-ரேயின் வழியாக அவைகளின் சலனத்தைக் காண்பிக்கும் சினிமாப் படங்கள்கூடத் தயாரித்து இருக்கிறார்கள். ட்யூபர்குலாஸிஸ் இருக்கும் நுரையீரலை படம் எடுத்திருக்கிறார்கள். X-ரே ஊடுருவிப் பாயக்கூடாத சில திராவ பதார்த்தத்தைக் கொஞ்சம் ஊசியேற்றி விடுவதால் நுணுக்கமான பாகங்கள் நன்றாகத் தெரியும்.

இதேமாதிரி ரத்த ஓட்டங்களையும், மூளையின் கோளாறுகளையும் இன்னும் தேகத்தின் ஒவ்வொரு அங்கத்தையும் வெகு கூர்மையாகக் கவனித்து அதன் தத்துவங்களையறிய X-ரே மிகவும் உபயோகமாகிறது.

இவ்வளவும் ரணசிகிச்சை முறையின் ஆரம்ப வளர்ச்சிதான். இப்பொழுது இரத்தம் சிந்தாமல் ஆப்பரேஷன் செய்ய முடிகிறது. இம்மாதிரியாக மற்ற விஞ்ஞானப் பகுதிகளில் கண்டு பிடிக்கப்படும் புதிய முறைகள் வைத்தியத்திற்கு உதவத்தான் செய்யும். ரணவைத்தியம் விஞ்ஞான வளர்ச்சியின் கூட்டுறவினால் இன்னும் முன்னேற இடமிருக்கிறது.'

## ஹரிஜனங்களை ஆதரியுங்கள்





# ஆஸாம் தேசத்து அநாகரிகர்கள்

## கல்யாண முறையில் கனத்த வேடிக்கை

### நாகர்கள், குக்கிகளின் வரலாறு

ஆஸாம் தேசத்தில், பிரம்மபுத்ரா, சர்மா என்ற நதிகளினிடையே, காடுகளடர்ந்ததும் மழை மிகுந்ததுமாகிய வனப் பிரதேசங்களில், ஆங்காங்கு ஒருவிதப் பூர்வீகக் குடிகள் காணப்படுகின்றனர். அவர்கள் எங்கு தங்கியவர்கள், எவ்வாறு அந்நாட்டுக்கு வந்தார்கள், அவர்களது சரித்திரம் என்ன, என்பன போன்றவற்றைத் திட்டமாகக் கூற முடியாது. காரணம், அவர்கட்கு எழுத்து வடிவத்தில் அமைந்தவோர் பாஷையில்லை என்பதாம். சாதாரணமாகச் சீனா தேச எல்லைப்புறங்களிலும், பர்மாவின் ஓரங்களிலும் வசித்துவந்த சில ஜனங்கள், நாகரிகமடைந்த வேறு சிலரால் துரத்தப்பட்ட காரணத்தால் இப்பகுதிகட்கு—விசேஷமாக வடகாச்சார் மலைகள் என்ற விடத்திற்கு—வந்தார்கள் என்பதே அவர்களைப்பற்றிய சரித்திரம் என்று சொல்லப்படுகிறது.

இந்த ஜாதியார்கள் இரு எல்லைப் புறங்களிலுமிருந்து ஓடியதனால் இந்தோ-சீனர்கள் அல்லது திபத்தோ-பர்மியர் என்ற புது வகுப்புகள் ஆக்கப்பட்டிருக்கின்றன.

இந்த வன ஜாதியார்கள் நெருங்கி நெருங்கி வாழ்ந்து வந்தாலும் இடையிடையே பெரிய காடுகளும் மலைகளுமிருப்பதால், பிரிவுபட்டுத் தனித்தனிப் பழக்க வொழுக்கங்களும், தனித்தனிப் பாஷைகளும் பெற்றிருக்கிறார்கள். இவர்கள் வசிக்கும் மலைகள் இவர்களுடைய பெயர்களாலேயே அழைக்கப்படுகின்றன. ஆதல்பற்றியே ஆஸாமில், காசி மலைகள், காரோ மலைகள், நாக மலைகள், மிக்கிர் மலைகள் எனப் பலமலைகள் காணப்படுகின்றன.

மேற்குறித்தவாறு ஆஸாம் மலைச்சாரல்களில் பல ஜாதியார்களிருப்பினும் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர்கள் குக்கிகளும் நாகர்களுமாம்.

#### பெண்களின் ஆடை

குக்கிப்பெண்கள் சாதாரணமாக இடையில் ஓர் பாவாடைபோன்ற சிற்றுடையும் மார்பில் ஓர் துணியுமே அணிகின்றார்கள். இடையில் அணிந்திருக்கும் துண்டு முழங்கால் வரையிலும் நீண்டிருக்கும். மார்பி லணிந்திருக்கும் துண்டு நெஞ்சை மறைத்துக்கொண்டு குறுக்காக ஓடி, இரு நுனிகளும் ஒன்றையொன்று சுற்றி அழுந்தி யிருக்கின்றன. குக்கிகள் பருத்திச் செடிகளை வளர்த்துப் பஞ்செடுக்கிறார்கள். பெண்கள் அப்பஞ்சைப் பக்குவம் செய்து பழைய கைத்தறி யொன்றில் நெசவு செய்து துணியாக்குவது வழக்கம். அப்பெண்கள் விரும்பும் நிறம் நீலமாகும். ஆனால் சிகப்பையும் சிலகால் ஆசைப்படுவர்.

ஆபரணமாகப் பல கொட்டைகளை மாலைகள் போல் செய்து கழுத்திலணிகிறார்கள். சிலகால் (வெள்ளி) ரூபாய்கள், கால் ரூபாய், அரை ரூபாய் நாணயங்கள் ஆகியவற்றையும் கோர்த்துக் கட்டிக்கொள்வதுண்டு. இந்த நகைகள் எல்லாம் கழுத்தை அலங்காரம் செய்ய, கைகள், புஜங்கள் முதலியவற்றில் பித்தளையினால் செய்த பல வளைகளை அணிந்து கொள்கிறார்கள். சிலகால் கழுத்திலும் பித்தளை நகைகள் அலங்கரிக்கக் காணலாம். காதுகளில்,—ஆடவரும் பெண்டிரும்—வெள்ளி வளையங்களை அணிந்து கொள்வதுண்டு. அவ்வளையங்கள் நான்கு அல்லது ஐந்து அங்குலம் குறுக்களவு பெற்றிருக்கும். அவற்றைத் தொங்கப்போடுவதற்கான துவாரங்களை அமைப்பது விசேஷமானதாகும். மூங்கில் குச்சியினால் கீழ்க்காதில் ஒரு சிறு துவாரம் போட்டு, குச்சை அதிலேயே வைத்துவிடுவார்கள். சில நாட்களானதும் அக்குச்சை எடுத்துவிட்டு அதைவிடக் கனமானவொன்றை நுழைப்பார்கள். அதன் மேல் (சில நாள் பொறுத்து) இன்னும் அதிகக் கனமுள்ள குச்சொன்றைச் செருகுவார்கள். இப்படிப் பன்முறை செய்து துவாரத்தைப் பெரிதாக்கியதும், வெள்ளி வளையம் உள் நுழைகின்றது. சிலகால் வளையத்தின் கனத்தினாலோ துளைபோடுவதில் ஏற்படும் கஷ்டத்தினாலோ காது பிளந்து விடலாம். அப்படிப் பிளந்துவிட்டால் கடவுள் கோபித்துக்கொண்டு விட்டார் என்று குக்கிகள் நம்புவார்கள்.

#### கல்யாண முறை

குக்கி ஆடவர் கல்யாணம் செய்ய விரும்பினால் பெண்ணின் பெற்றோருக்கு ஓர் பரிசு கொடுக்கவேண்டும். அப்பரிசு பெற்றுக்கொள்ளப் படுவது பெண் கொடுக்க இசைந்துவிட்டதற்கறிகுறியாம். இவ்வாறு ஒரு குடும்பம் தம் புதல்வியைக் கட்டிக்கொடுக்க இசைந்துவிட்டால் அக்குடும்பம், மாப்பிள்ளையாக வரப்போகிறவனிடம் ஐந்து வருடம் வேலை வாங்கலாம். எந்தக் குக்கி மாப்பிள்ளையும் கல்யாணத்துக்கு முன்பு மூன்று வருடமும் அப்பால் இரண்டு வருடமும் ஊழியம் செய்யாமலிருக்க முடியாது. அவன் ஓர் தனிக் குடிசையைக் கட்டித் தனி வாழ்க்கை நடாத்தத் தொடங்க வேண்டுமென்றால் வழக்கப்படி ஐந்து வருடமும் மாமனுக்குத் தொண்டு புரிந்தாக வேண்டும்.

கல்யாணத்தின்போது மணமகளும் மணமகனும் தரையில் ஒருவரையொருவர் அடுத்து உட்கார்வார்கள். கல்யாணம் நடாத்தும் புரோகிதன் அவர்கள் தலைக்குமேலே ஒரு கோழியைக் கழுத்தைப் பிடித்து அழுத்திக் கொல்வான். கோழி இறக்குமுன் படும் அவஸ்தையால் மணமக்கள் எவ்வளவு தூரம் இன்பமாக வாழ்வார்கள் என்று தெரிந்துகொள்ள முடியுமாம். பின்பு ஒரு குவளை அரிசிப்பானம் கொடுக்கப்படுகிறது. அதனை மணமகன் பாதி அருந்திவிட்டுப் பின் மணமகளுக்குக் கொடுப்பான். அப்போது புரோகிதன் கோழியின் இறக்கைகள் இரண்டையும் வெட்டி வலதிறக்கையை மணமகனின் தலைமீதும் இடதிறக்கையை மணமகளின் தலைமீதும் வைப்பான். அஃதோடு விவாகச் சடங்கு முடிவடைந்துவிடும்.

பொதுவாகக் குக்கி ஜாதியார்கட்கிடையில் ஆண் பெண்கள் மிகவும் சரசமாகப் பழகிக் கொள்வதுண்டு. கல்யாணமான பின் எந்தப் பெண்ணும்

தம் கணவனிடம் திருட்டுத்தனமாய் நடந்து கொள்வதில்லை.

### நாகர்கள்

நாகர்கள் விஷயம் குக்கிகளைவிட ரசமானதாகும். அவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்திருக்கின்றார்கள். அப்பிரிவுகள் சிலகால் பாஷை முதலியவற்றில் கூட வேறுபட்டிருப்பதுண்டு. சுமார் 50 வருடங்கட்கு முன்பு வரையிலும் நாகர்கள் பிரக்யாதி பெற்ற வேட்டைக்காரர்களாயிருந்தார்கள். விசேஷமாக அங்கமி நாகர்கள் வேட்டையில் மிகுந்த திறம் பெற்றவர்கள். நாகக்கன்னிகைகள், தம்மை நாடி வரும் புருஷன் பெரிய வேட்டைக்காரன் என்பதை நிரூபிக்கப் பல தலைகளை அடையாளமாகக் காண்பியாது போனால் நிச்சயமாகவும் அவனை மணக்கவே மாட்டார்கள்.

சாதாரணமாக நாகர்கள் தம் இருக்கைகளைச் செல்லமுடியாத மலைகளிலேயே கட்டுவார்கள். பெரும்பான்மையும் அவர்கள் தேர்ந்தெடுக்குமிடம் செங்குத்தனதாகவே இருக்கும். அவர்களது குடிசைகள் பிற மலைஜாதியார்களின் குடிசைகளைப் போன்றவையல்ல. கூரை கூடிய வரையிலும் தரையைத் தொட்டிருக்கும். ஒவ்வொரு குடிசையிலும் மூன்று அறைகள் காணப்படும். அவற்றில் பெரிய அறை நடுவிலிருக்கும். அதில் தான் எல்லோரும் தங்குவார்கள். வசிக்கும் அறையென்று அதனையே கூறலாம். அதன் பக்கத்திலிருக்கும் ஒரு சிறிய அறை 'ஸ்டோர்' ஆக உபயோகிக்கப்படுகிறது. தானியங்கள் யாவும் அங்குதானிருக்கும். பெண்கள் அரிசி குத்துவது அங்கேயே. நாகர்கள் தயாரிக்கும் உண்டிகளில் அரிசிப்பானமென்பது முக்கியமானது. அது சிறு பான்மை கள்ளை யொத்திருக்கும். பெண்கள் எஞ்சியிருக்கும் ஒரு அறையில் இந்தக் கள்ளை சேமித்து வைத்துக்கொள்வர்.

ஒவ்வொரு நாகர் கிராமத்திலும் இரண்டு பொதுக் குடிசைகள் காணப்படும். அவற்றிலொன்றில் மணமாகாத வாலிபர்களும், மற்றொன்றில் கன்னிகைகளும் தங்குவர். கன்னிகைகளின் குடிசையின் தலைவியாக ஒரு விதவையோ அல்லது வயதான ஒரு பெண்ணோ அமைந்திருப்பாள். இவ்விரு விடுதிகளும் கல்யாணமானவர்கள் வசிக்கும் குடிசைகளை விட்டு அகன்றிருக்கும். கல்யாண மாகாத ஆடவரும் பெண்டிரும் தாராளமாகப் பேசிக்கொள்ளும் உரிமைப் பெற்றிருக்கிறார்கள். ஒவ்வொரு பெண்ணும் வாலிபனும் மனைவி, கணவன் ஆகியவர்களின் கடமையென்னவென்பதைத் தெரிந்திருக்க வேண்டுமென்பதே நாகர்களின் உத்தேசம்.

### ஆடையும் பழக்க வழக்கங்களும்

ஆடையைப் பொறுத்த வரையிலும் குக்கிப் பெண்களைப்போன்றவரே நாகப் பெண்கள் என்று கூறலாம். ஆனால் நாகப்பெண்கள் விசேஷ நாட்களில் மிக ஆடம்பரமான உடைகளைத் தரித்துக் கொள்வார்கள். நாக இளம் பெண்கள் கூந்தலைக் குட்டையாக வெட்டிக்கொள்வது வழக்கம். ஆனால் கல்யாணமானதும் நீளமாக வளரவிட்டு விடுவார்கள். அவர்களும் குக்கி மாதர்களைப்போலவே தோள் வளைகள், கைவளைகள், கொட்டைகளாலான மாலைகள், பித்தளை வெள்ளி வளையங்கள் ஆகியவற்றை அணிவதுண்டு. கல்யாணத்தின்போது இவைகளெல்லாம் அகற்றப்பட்டுவிடும். ஏனெனில் திருமணமானதும் ஒரு பெண் கணவனோடு குடும்பத்தைப் பரிபாலிக்கும் பெரிய வேலையில் இறங்குகின்றாள் என்பது நாகர்கள் கருத்து. குடும்ப பாரத்தில் தண்ணீர் எடுப்பதென்பது ஓர் கடுமையான வேலையாகும். ஏனெனின் நாகர்கள் செங்குத்தான இடங்களில் வீடுகளைக் கட்டுவதால், 300 அடி 500 அடி கீழே இறங்கிப் பெரிய மூங்கில் காடுகள் வழியாகச் சென்றே தண்ணீர் எடுத்துக்கொண்டு வரவேண்டியிருக்கும்.

நாகர்களின் மணமுறை மிகவும் எளிது. ஒரு பெண்ணும் புருஷனும் ஒருவரை யொருவர் நேசித்தால், புருஷன் பெண்ணின் பெற்றோரிடம் செல்வான். அவர்கட்கு மணமகன் பொருத்தமானவன் என்று தெரிந்துவிட்டால் உடன் மணமகன் அவர்கட்கோர் பரிசளிக்கவேண்டும். சிலகால் பெற்றோரின் சம்மதமின்றியே பெண்ணும் புருஷனும் மணந்து கொள்ளலாம். அப்படி நேரிடுங்காலையில் மணமகன் மாமன் மாமிக்குப் பரிசெதுவும் கொடுக்கவேண்டியதில்லை.

ஒரு பெண் புருஷனை இழந்துவிட்டால் அவள் அதற்குமேல் விதவையாகவே இருக்கச் சம்மதித்துப் புருஷனின் ஆஸ்தியை ஆண்டு வரலாம். அவ்வாறு ஒழுகுவதில் தவறிவிட்டாளானால் உடன் இறந்தவனின் சுற்றத்தார் கூச்சல் போட்டு அவளிட மிருந்த சொத்தை யெல்லாம் பிடுங்கிக் கொள்வதோடு தொல்லையும் செய்து விடுவார்கள். முற்காலத்தில் அத்தகைய விதவைகட்குக் கொடுத்துவந்த தண்டனை சித்திர வதையாகும்.

### சுதந்திர மிழக்கின்றனர்

நாகப் பெண்கள் கல்யாணத்தன்று தங்களது சுதந்திர மெல்லாவற்றையும் இழக்கின்றனர். பெண்ணென்ற நிலைமையில் மற்றவர்களோடு தாராளமாகக் கலந்துகொள்வதிலும் நருத்தனங்களில் கலந்து கொள்வதிலும் தடையில்லை. நாகர்களின் பெரிய பொழுது போக்கு நடனம்தான். கல்யாணமாகாத வாலிபர்களும் பெண்களும் சிற்சில போது கயிறிழுக்கும் (Tug-of-war) விளையாட்டில் சேருவதுண்டு. கயிற்றுக்குப் பதிலாகக் காட்டுக் கொடிகளை உபயோகித்துக் கொள்வார்கள். இந்த விளையாட்டுகளில் வாலிபர்கள் முதலாவது பெண்களை ஜயிக்க விட்டுவிட்டு அப்பால் இறுதியில் தாங்களே ஜயத்தை யெல்லாம் திருப்பிக் கொள்வார்கள். அவ்வாறு ஜயமடைந்தால் பெண்கள் தோற்றதற்கறி குறியாக அரிசிமது கொடுக்கவேண்டும். அதனை வாலிபர்கள் முதலில் குடித்து, பிறகு பெண்கட்கருத்துவார்கள். அதன்மேல் இரு சாராரும் சேர்ந்த நடனமொன்று நடைபெறும். இது சிலகால் பல மணி நேரங்கள் நீடித்தாலும் நீடிக்கலாம்.





# பனமாக் கால்வாய்

(ஜே. இ. ஹாரபின் எழுதியது)

முப்பது வருடங்களுக்கு முன்பு, பனமாப் பூசந்தியில், விலையுயர்ந்த யந்திரங்கள் வீணாகத் துருப் பிடித்துக் கொண்டு கிடப்பதைக் காணலாம். அது அமோகமான பண விரயத்திற்கும் உயிர்ச் சேதத்திற்கும் ஓர் அறிகுறியாக அங்கு மனிதனின் தோல்வியைக் காட்டி நின்றது.

ஸூயெஸ் கால்வாயைக் கட்டி முடித்த பிறகு பெர்டினண்ட் டிலெஸ்ஸப்ஸ் என்ற பெரிய என்ஜினியர், போன நூற்றாண்டின் இறுதியில், பஸிபிக் மகா சமுத்திரத்தையும் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தையும் பிணிக்கும் பனமாக் கால் வாயைக் கட்டும்படி முற்பட்டான்.

இதற்கு முன் கொலம்பஸ் இந்தத் தரைப் பரப்பைக் கடப்பதற்கு வேறு வழியுண்டா என்று மேற்குக் கடற்கரையோரம் தனது கப்பல்களை விட்டுச் சோதித்துப் பார்த்தான். அது பிரயோஜன மற்றதாகவே முடிந்தது. ஆயிரம் மைல்கள் சுற்றிச் சேதம் விளைவிக்கும் ஹார்ன் முனையைக் கடந்துதான் வரவேண்டியிருந்தது. அக்காலத்து ஸ்பெயின் தேசத்து மன்னர்களான இரண்டாவது சார்ல்ஸ் மூன்றாவது பிலிப் முதலியோர் அந்தப் பூபாகத்தைச் சோதித்து பூசந்தியின் வழியாகக் கால்வாய் வெட்டுவதற்கு ஒரு பிளான் தயாரிக்கும்படி கட்டளையிட்டார்கள். இந்த ஆதி முயற்சிகள் எல்லாம் வியர்த்தமாயின. என்ஜினியரிங் சாஸ்திரம் புதிய முறையில் வளர்ச்சியடையுமட்டும், ஒன்றும் செய்யமுடியவில்லை.

டிலெஸ்ஸப்ஸின் கம்பெனி 1881-ல் பனமாவில் தங்கள் வேலையைத் துவக்கினார்கள். ஏழு வருடங்களுக் கப்புறம் 2/5 பாகம்தான் முடிந்திருந்தது. அதற்குச் செலவுத் தொகை 80,000,000 பவுன்களாயிற்று. கம்பெனி இந்தச் செலவைப் பொறுக்க முடியாமல் முறிந்து போயிற்று. இந்த ஊழல்களை ஆராய்ச்சி செய்தவர்கள், செலவில் மூன்றில் ஒரு பங்குதான் கால்வாய்ச் செலவிற்குச் சென்றது. மற்ற இரண்டு பங்கும் கம்பெனி டெப்யுட்டிகளால் திருடப்பட்டும் வீணாக்கப்பட்டும் போய் விட்டது என்று சொன்னார்கள்.

இம்மாதிரியான மோசடியை பிரஞ்சு அரசாங்கம் ஆராய்ந்தது. கம்பெனி டைரெக்டர்களும், டெப்யூட்டிகளும், டிலெஸ்ஸப்ஸூம் அவர் புத்திரனும் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டு, அபராதமும் சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டார்கள். முக்கால்வாசி டிலெஸ்ஸப்பும் அவர் புத்திரனும் நிரபராதியாகவே இருந்திருக்கலாம். இரண்டு மூன்று வருஷங்களில் அந்த என்ஜினியர் மனமுடைந்து இறந்தான்.

இந்தக் கம்பெனி முறிந்து போனதற்குத் திருடிய முதலாளிகள் மட்டும் காரணமல்ல. அந்தத் தேசத்திலிருந்த சுகாதார வசதியும் என்ஜினியரின் பிளான்களைப் போல் அவசியமாகக் கவனிக்கப்பட வேண்டியதே. அக்காலத்தில் மஞ்சள் சுரம் என்றும் மலேரியா என்றும் சொல்லப்படும் வியாதிகளுக்கு மாற்றுக் கண்டுபிடிக்கப்படவில்லை. இதனால் 50,000 பேர்கள் வியாதியினால் இறந்தார்கள் என்று தெரியவருகிறது.

வேலையும் அரைகுறையாக நிறுத்தப்பட்டது. அதிக விலையுள்ள யந்திரங்கள் துருப் பிடித்துக்கொண்டு இருந்தன. ஸ்பானிய-அமெரிக்கா யுத்தத்தின் பிறகும் நிலைமை இம்மாதிரியாகத் தான் இருந்தது. பொதுஜனங்களிடையே பனமாக் கால்வாயின் அவசியத்தைப்பற்றி ஜாக்கிரதையாகப் போதிக்கவேண்டி யிருந்தது.

தியடோர் ரூஸ்வெல்ட் என்ற அமெரிக்கப் பிரஸிடென்ட் இது அமெரிக்கக் கடற்படையை இரண்டு மடங்கு பலம் அதிகமாக்கும் என்று சொன்னார். இந்தக் கால்வாயில் இருக்கும் கப்பற்படை இரண்டு பெரிய சமுத்திரங்களையும் சுலபமாகத் தங்கள் ஆதிக்கத்தில் ஆக்கிக் கொள்ளும். அமெரிக்கப் பிரஸிடென்ட் மிக்கின்லி கொலை செய்யப்பட்ட பிறகு இவருக்கு அந்தப்பதவி கிடைத்தது. உடனே பனமாவில் ஆதிக்கமுள்ள கொலம்பியா அரசாங்கத்தினிடம் கால்வாயைக் கட்டுவதற்கு அதன் சம்மதத்தைப் பெற முயற்சித்தார். இரண்டு சமுத்திரங்களுக்கும் இடையிலுள்ள பூசந்தியின் முழு நீளத்திலும், ஆறு மைல் அகலம் உள்ள நிலத்திற்கு 10 மில்லியன் டாலர்களும் மேற்கொண்டு வருஷா வருஷம் ¼ மில்லியன் டாலர்கள் வருஷ வரியாகவும் கொடுப்பதாக ஒப்பந்தம் பேசினார். கொலம்பிய மந்திரி இந்த உடன்படிக்கையில் கையெழுத்திட்டார். ஆனால் கொலம்பிய ஸெனட் தங்கள் பொக்கிஷத்தின் சீர்கேடான நிலைமையை நினைத்து இன்னும் அதிகமாகக் கேட்க வாரம்பித்தார்

கள். தங்கள் மந்திரி கையெழுத்திட்ட உடன்படிக்கையை ஒப்புக்கொள்ள மறுத்தனர்.

இதனால் கால்வாய் வெட்ட ரூஸ்வெல்ட் எடுத்துக்கொண்ட பிரயத்தனம் தடைப்பட்டது. தியடோர் ரூஸ்வெல்ட் பலமற்ற சிறு தேசங்களின் உரிமைகளைப்பற்றி அவ்வளவாகக் கவலைப்படுகிறவரல்ல. அமெரிக்க காங்கிரஸில், கொலம்பியா ஒப்புக்கொண்டாலும் அல்லது மறுத்தாலும், கால்வாயைக் கட்டித்தான் தீரவேண்டும் என்று ஒரு செய்தி யனுப்பினர்.

தனது நண்பருக்கு எழுதிய ஒரு அந்தரங்கம் கடிதத்தில் பின் வருமாறு எழுதியிருந்தார். "பனமா ஒரு சுதந்திரமுள்ள தனித் தேசமாக, கொலம்பியாவிற்கு உட்படாத தேசமாக இருந்திருக்கக் கூடாதா என்று ஆசைப்படுகிறேன். இப்பொழுது திடீரென்று அது சுதந்திரத்தைப் பெற்றால் என்ன? இதைப் பற்றி நான் பகிரங்கமாகச் சொன்னால், பனமாவை சுதந்திரம் பெறுவதற்குத் தூண்டிப் புரட்சியை உண்டுபண்ணுகிறேன் என்று சொல்லுவார்கள்."

இந்தக் கடிதத்திற்குப் பிறகு கொஞ்ச நாட்களில் பனமாப் புரட்சியை உண்டு பண்ணி தனது சுதந்திரத்தை நிலை நாட்டியது. உடனே அமெரிக்கப்படைகள் பனமாவின் துணைக்காகக் கொலம்பியா படைகள் வருமுன் அங்கு வந்து விட்டன. முன்பு அமெரிக்கப் பிரஸிடன்டாயிருந்த லின்கோன், கூட்டு அரசிலிருந்து விலகிக் கொள்ளுவதற்கு, அதிலிருந்த தனிப்பட்ட தேசங்களுக்குச் சுதந்திரம் கிடையாது என்று வடக்குத் தேசங்கள் விலகிக்கொள்ள முயற்சித்த பொழுது சொல்லியிருந்தார். அந்த உரிமை இப்பொழுது பனமாவின் சுதந்திரத்தில் தான் ஸ்தாபிக்கப்பட்டது.

உடனே முன்பு கொலம்பியாவுடன் ரூஸ்வெல்ட் சொல்லியபடி பனமாவிற்கு 10 மில்லியன் டாலர்களும் வருஷா வருஷம் ¼ மில்லியன் டாலர்களும் வரியாகக் கொடுப்பதாக ஒத்துக்கொண்டார். பனமாவின் சுதந்திரம் ஊர்ஜிதமாகிப் 15 நாட்களில் இது நடந்தது. அமெரிக்க அரசாங்கம் கால் வாயை வெட்டுவது மட்டு மல்லாமல் கோட்டை கொத்தளங்களும் கட்டுவதற்கு அனுமதிக்கப்பட்டது.

உடனே கால்வாயை வெட்டுவதற்கு ஏற்பாடுகள் ஆயின. 1914 வருஷந்தான் முடிந்தது. 1920-ம் வருஷந்தான் அதற்குத் திறப்பு விழா முதல் முதலாகக் கொண்டாடினர்கள். அமெரிக்காவிற்கு இதில் 360 மில்லியன் டாலர்கள் செலவாயின.

முதலில் பிரஞ்சுக்காரர்கள் கால் வாயை வெட்டமுடியாததினால் ஏற்பட்ட கஷ்டங்கள் இவர்களுக்கு ஒரு நல்ல முன் எச்சரிக்கையாக இருந்தது. அது என்ஜினியரிங் சாஸ்திரத்தின் வெற்றி மட்டுமல்ல. அது வைத்திய சாஸ்திரத்தின் ஒரு பெரிய வெற்றியுமாகும். அப்பொழுதுதான் பெரிய வைத்திய நிபுணர்கள் ஆராய்ச்சி செய்து மஞ்சள் காய்ச்சலுக்கும், மலேரியாவிற்கும் மருந்து கண்டுபிடித்தார்கள். இதில் ஒரு பெரிய டாக்டர் உயிரை இழந்தார். 8 வருஷத்தில் அங்கு இந்த வியாதியினால் இறந்தவரின் தொகை 4000.

பனமாப் புரட்சியின் பிற்கதை இது மட்டு மல்ல. கொலம்பியாநாடு இந்தக் கால்வாய் கட்டுவதற்காக நடந்த சங்கதிகளை மறந்து விடவில்லை.

கால்வாய் வெட்டி 18 வருஷங்களுக்கப்புறம் அமெரிக்கப் பிரசிடென்ட் ஹார்டிங்கின் காலத்தில் கொலம்பியாவின் அநியாயத்தைத் தீர்ப்பதற்காக 25 மில்லியன் டாலர்கள் நன்கொடையாக கொடுத்தார். இவர் காலத்தில் மண்ணெண்ணை ஊற்றுகளைக் கைப்பற்றுவதற்குப் பிரிட்டிஷ்க் காருடன் போட்டியிடவேண்டியிருந்தது. மெக்ஸிகோ, வெனிஜுலா, கொலம்பியா முதலிய பிரதேசங்களில் அதிகமாக உற்பத்தி செய்ய முடியும் என்று கண்டுபிடிக்கப்பட்டது. பிரஸிடென்ட் ஹார்டிங்கின் அரசாங்கம் 25 மில்லியன் நன்கொடையாகக் கொடுத்தது காரணமில்லாமல் அல்ல.



திருச்சி ரயில்வே ஸ்டேஷனில் மாஸ்டராகவிருந்த திரு. N. P. அச்யுதன் தம்பிகட்கு ஸ்டேஷன் உத்தியோகஸ்தர்களால் 3-9-34-ந் தேதி ஓர் பிரிவுபசார விருந்து நடத்தப்பட்டது. —Pon.



# வரப்போகும் அரசர்கள்

## ஆட்டோவின் அதிர்ஷ்டம்

### ஹோஹன்ஜல்லார்னும் ஹிட்லரும்

இந்த ஐரோப்பிய அரசியல் நெருக்கடியில் ஆர்ச்ட்யூக் ஆட்டோ சமீபத்தில் ஆஸ்திரிய அரசனாவான் என்று மேல்நாட்டுப் பத்திரிகைகள் ஏகமுழக்கமாக எழுதுகின்றன. தலைமுறை தலைமுறையாக 650 வருஷம் இவாது முன்னோர்கள் ஆண்டுவந்த இடந்தான் ஆஸ்திரியா தேசம்.

ஆர்ச்ட்யூக் ஆட்டோ இருபத்து மூன்று பிராயத்தினன். அரியணையை எதிர்பார்த்து இருக்கும் நாடு கடத்தப்பட்ட அரசர்களுள் இவனும் ஒருவன்.

கொஞ்ச காலமாகக் குடியாசுதான் பொதுஜன நன்மையைக் கோரும் என்ற நினைப்பிலே எத்தனையோ தேசங்கள் அதை ஆதரித்தன. உண்மையில் குடியாசில்தான் முன்பிருந்த முடியரசைவிட நிலைமை வெகு மோசமாக இருந்து வருகிறது.

இருந்தாலும் பொதுஜன வெறுப்பினால் அரசர்கள் நாடு கடத்தப்படவில்லை. முன்பு பதினெட்டாம் நூற்றாண்டில் நடந்த பிரஞ்சுப் புரட்சியின் பொதுஜன மனப்பான்மையினால் அவர்கள் நாடுகடத்தப்படவில்லை. நேசக் கட்சியினர் அவர்கள் நாடு கடத்தப்பட வேண்டும் என்று தீவிரமாகக் கோரியதால்தான் செல்லவேண்டி யிருந்தது. யாராவது ஒருவர் யுத்தத்தின் பொறுப்பை, யுத்தத்தின் குற்றத்தை, ஏற்றுக்கொள்ள வேண்டி யிருந்ததால், நேசக்கட்சியினர், அதை இவர்கள் தலையில் ஏற்றிவைத்து நாடு கடத்துவதற்கு வசதியை ஏற்படுத்தினர். இம்மாதிரி நாடுகடத்தப்படும் அரசர்கள் திரும்பவும் தங்கள் அரியணையைப் பெறுவது வெகு எளிது. அது மட்டு மல்ல, அவர்கள் திரும்பி வந்து தங்கள் பதவியை வகித்தும் கொள்வார்கள். அரசியல் நெருக்கடியின் சுழற்சி அவர்களை வெகு எளிதில் சிம்மாசன மேற்றுவித்து விடுகிறது.

இப்பொழுது இருக்கும் ஐரோப்பிய நிலைமை ஆட்டோவை மறுபடியும் ஆஸ்திரியத் தலைநகரான வியன்னாவிற்குக் கொண்டு வந்துவிடும் என்று தெரிகிறது. டால்பஸ் கொலைதான் இம்மாதிரியான நிலைமையை



ஆஸ்திரேலியா, ந்யூ ஸௌத்வேல்ஸிலுள்ள காஸ்க்யுஸ்கோ மலையில் 18" X 14" அளவுள்ள ஒரு விதமான காளானை கண்டெடுத்திருக்கிறார்கள். படத்திலிருப்பவர் அதைக் கையில் ஏந்தியிருக்கிறார்.

—N. I. A.

உண்டுபண்ணக் காரணம். இதில் அரசியல் தத்துவம் ஒன்றுமில்லை. முஸோலினியின் நோக்கம் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆஸ்திரியாவில் முடியாசிருந்தால் ஜெர்மனியுடன் அது சேருவதற்கு அதிக மார்க்கமில்லை என்று நினைக்கிறார். முஸோலினியின் உதவி ஆட்டோவிற்கு அதிகமாக வேண்டும். ருமானிய அரசரும் ஜுகோஸ்லாவிய அரசரும் இதைப் பற்றி ஆலோசிக்கக் கூடிவிட்டார்கள். இதற்குமுன்பு இந்தச் சிறு என்டென் (Little Entente)தான் ஆஸ்திரியா முடியாசாவதற்கு எதிர்த்து நின்றது.

போன வருஷம் முஸோலினியும் இதை எதிர்க்கத்தான் செய்தார். ஆட்டோவும் சில தவறுகள் செய்திருக்கிறார். பேஸிஸம் ஆஸ்திரியாவிற்குக் கெடுதியை விளைவிக்கும் என்றும் தெற்கு ட்டைராலை இத்தாலியா ஆஸ்திரியாவிற்குக் கொடுத்துவிட வேண்டும் என்றும் சொல்லி யிருந்தார். ஆனால் அரசியல் சந்தர்ப்பங்கள் பகைமையை விட சக்தி வாய்ந்ததுபோலும். இப்பொழுது இருவரும் நண்பர்களாகி விட்டார்கள்.

எப்பொழுது ஆட்டோ அரியணையேறுவது என்பதை ஆஸ்திரிய மாஜி அரசியான ஜிட்டா (Zita)தான் நிர்ணயிக்கவேண்டும். ஆட்டோ மறுபடியும் ஆஸ்திரியாவைப் பெறுவதைத் தனது வாழ்க்கையின் ஆதர்சமாகக் கொண்டவள் ஜிட்டா. அவளால்தான் அதை நிர்ணயிக்க முடியும்.

ஆட்டோ நல்ல படிப்பாளி. அரசியல் ஸ்தானத்தை வகிக்கத் தன்னைத் தயாராக்கிக் கொண்டவர்களில் ஒருவர். அவர் இப்பொழுது இருந்துவரும் ஸ்டீனுக்கொர்ஜி அரண்மனையில் அவரை சாம்ராட் (Emperor) என்றுதான் அழைக்கிறார்கள். ஜிட்டா அவரை அரசியல் கௌரவங்களில் நன்றாகப் பழக்கி விட்டிருக்கிறாள்.

#### புதிய ஜார் (Tsar)?

பிரான்ஸில் முடியாசு வருவது எவ்வளவு அசம்பாவிதமோ அவ்வளவு அசம்பாவிதம் ருஷ்யாவில் முடியாசு ஏற்படுவது. அதற்கும் ஒரு வாரீஸ் இருந்து வருகிறார். அவர் பெயர் கிரான்ட் ட்யூக் வ்லாடிமிர் ரோமனுப் (Grand Duke Romanoff). அவர் பதினேழு வயதானவர். ருஷ்யச் சட்டப்படி அவர் பதினாறுவது வயதிலேயே மேஜராகி விட்டார். பிரிட்டனிலிருக்கும் ஸெயின்ட் ப்ரையாக்கில் அவர் தன்னை ருஷ்ய அரசர் என்று கூறிக்கொண்டு வசித்து வருகிறார்.

#### ஸ்பெயின் அரியணை

சமீபத்தில்தான் ஸ்பானிய மன்னர் நாடு கடத்தப்பட்டார். நாடு கடத்தப்

# மனிதனின் மின்சார சக்தி

(மேஜர் ரேமான்ட் பிலிப்ஸ் ஆன்ஸர்ஸ் என்ற பத்திரிகையில் எழுதுவது.)

மனிதனுக்குள்ள மின்சார சக்தி அவர் அவர் தேக சக்தியைப் பொறுத்த மட்டில் தான் இருக்கும். சிலருக்கு கருங் கம்பளியின் மேல் நடந்தவுடனேயே இந்தச் சக்தி அதிகமாகிறது. அல்ட்ரா வயலட் ஒளிரேகையின் முன்பு நமது பற்கள் பிரகாசமாக மின்னும். இருட்டறையில் வைத்து இம்மாதிரிச் செய்தால் இந்த ஒளியின் பிரகாசம் அதிகமாகத் தெரியும்.

இம்மாதிரி மின்சார சக்தி பரவுவதைப் பற்றி சமீபகாலமாக விஞ்ஞான சாஸ்திரிகள் ஆராய்ந்ததில் புதிய புதிய விஷயங்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். வைத்திய நிபுணர்களுக்கு இதனால் எத்தனையோ வியாதிகளின் குணங்களைக் கண்டுபிடிக்கச் சாதகமாக இருக்கிறது. ஒவ்வொருவருடைய தேகாரோக்கியத்திற்குத் தகுந்தபடி மின்சார சக்தி ஒளி ரேகையின் அலையளவு இருக்கும்.

சமீபகாலத்திற்கு முன், ஒரு மின்சார யந்திரத்தின் பக்கத்தில் நின்றாலே மனிதனுடைய மின்சாரசக்தி யந்திரத்தின் சக்தியையதிகமாக்குகிறது என்று நிரூபித்திருக்கிறேன். இந்த மாதிரி நிரூபணம் செய்வதற்கு வயர்லெஸ் செட்டில் இருப்பதைப்போல் வால்வுகளைச் செய்து தாம்பிரத் தகடு அடிக்கப்பட்ட பெட்டிக்குள் வைத்து விட்டால் போதும். அது மனிதனுடைய மின்சார சக்தியைக் காண்பிக்கும்.

மனதும் தேகமும் ஒன்றையொன்று தாக்கித் தன் வயப்படுத்துகின்றன. மனிதனுடைய கோபம், கவலை முதலிய மன வேறுபாடுகளுக்குத் தக்கபடி அவனுடைய மின்சார சக்தி மாறுகிறது. உள்ளத்தின் நிலையே மின்சார மாறுதல்களைக் காண்பிக்கும்.

மனிதனுடைய மின்சார சக்தியைக் காண்பிக்க ஒரு வேடிக்கையான பரிட்சையைக் காண்பிக்கலாம். சிறு விளையாட்டு ரயில் வண்டிகளை மின்சார யந்திரத்துடன் பிணித்து அதை ஒருவனை கையில் பிடித்துக்கொள்ள வைத்தால் அந்த ரயில் வண்டிகள் ஓடுவதைக் காணலாம். சிலர் பக்கத்தில் நிற்பதே இந்த யந்திரத்தை யோட்டுவதற்குப் போதுமானது. இதை இன்னும் நன்றாக நிரூபிப்பதற்கு அந்த மனிதனை மின்சாரம் ஊடுருவிப்பாய முடியாத ஒரு கண்ணாடி முக்காலியின்மீது உட்கார வைத்துவிட்டால் வெகு ஸ்பஷ்டமாகத் தெரியும்.

மனிதனை ஒரு பாட்டரியின் நிலையில் வைத்துச் சிறு ரேடியோ ரயில் வண்டியையும் ஓட்ட முடியும்.

சில காலமாக ஆராய்ந்து ஒரு புதிய யந்திரத்தைக் கண்டுபிடித்திருக்கிறேன். அது மனதில் உண்டாகும் குண வேறுபாடுகளை எல்லாம் கணித்துக் கூறக் கூடிய நிலையில் இருந்துவருகிறது. இந்த மெஷின் பக்கத்தில் இருந்துக்கொண்டு இரண்டு கண்ணாடிக் குழாய்களைக் கைகளில் வைத்துக்கொண்டால் மனதில் இருக்கும் எண்ணத்தின் சக்திக்குத் தகுந்தபடி அந்த யந்திரம் அசையும். அந்தச் சோதனையிலும் மனிதன் மின்சாரம் போக முடியாத கண்ணாடி நாற்காலியில் இருந்துக் கொண்டால் இதன் உண்மை நன்கு விளங்கும்.

இன்பிரா சிகப்பு (Infra red) என்ற கண்ணுக்குத் தெரியாத ஒளிரேகை என்பவற்றைக் காண்பிக்கும் யந்திரத்துடன் நான் கண்டுபிடித்திருக்கும் யந்திரத்தைப் பிணித்துவிட்டால் அது இந்த ஒளிரேகையை மனிதன் பக்கத்தில் வந்து நின்ற மாத்திரத்தில் பாப்பக் கூடிய சக்தி படைத்து விடுகிறது. இந்தச் சோதனைகள் மனிதனின் மின்சார சக்தி பாப்பக் கூடியவை என்பதைத் தான் காண்பிக்கின்றன. இதன் சக்தி இம்மாதிரி எதைச்சாதிக்கும் என்பதைக் கண்டு பிடிக்கப்படவில்லை. உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் ரேடியோ ஆக்டிவ் (Radio-active) என்று கூறுகிறார்கள். விஞ்ஞானம் இயற்கையின் இரகஸியங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அறியும்.

பட்டவர்களில் முதலாவதாகச் சிங்காதனத்திற்கு வரக்கூடியவர் அவர்தான். அங்கு குடியாட்சியின் நிலைமை வெகு நெருக்கடியாக இருந்துவருகிறது. ஸ்பெயினில் அவருக்குப் பதிலாக அவரது மூன்றாவது புத்திரனாகிய ஜூவான் டி பூர்ப்பன் (Juan De Bourbon) ஒருவேளை வரலாம். ஜூவான் பிரிட்டிஷ் கப்பல் படையில் இருந்து பழகியவர். ஸ்பானிய முடியரசுக் கட்சி அவரைத் தான் கூப்பிடலாம் என்று தெரிகிறது.

### ஹோஹன் ஜல்லார்ன்கள்

ஜெர்மனியில் இப்பொழுது ஹிட்லர் பிரஸிடன்ட்—பதவிக்கு வந்துவிட்டதால் ஜெர்மன் முடியரசுக் கட்சிகளின் சக்தி மங்கிப் போயின. ஹின்டன்பர்க் இறந்தவுடன் ஹோஹன் ஜல்லார்ன்கள் மறுபடியும் ஜெர்மன் அரசை ஸ்தாபிப்பார்கள் என்று அவர்கள் கனவு கண்டுக்கொண்டிருந்தார்கள். ஹின்டன்பர்க் இறக்கும் தருவாயில் மாஜி இளவரசர் வில்ஹெல்மின் புத்திரனை லூயி பர்டினண்ட் வரலாம் என்று எதிர்பார்த்திருந்தார்கள். ஹிட்லர் அரசர் போட்ஸ்டாமில் வசிக்க வேண்டும் என்று நினைத்தால் இந்த வாலிபன்தான் அந்தப் பதவியை வகிக்கலாம்.

"ஜெர்மன் மகாஜனங்கள் என்னை அரசனாக வேண்டும் என்று நினைத்தால் அப்பதவியை நான் ஏற்றுக் கொள்வதற்குத் தயார்" என்று கூறியிருக்கிறார்.

இந்த இளவரசர் டிட்ராயில் டாக்டர் லூயி பெர்டினண்ட் என்ற மாறு பெயரில் போர்டு மோட்டார்க் கம்பெனியில் இருந்து வருகிறார்.

இப்பொழுது யார்தான் பட்டத்திற்கு வருவார்கள் என்று சொல்லிவிட முடியாது. யாருக்கு அதிர்ஷ்டமோ?








தாய்:—ஏண்டா அம்பியை அடிக்கிறாய்?

சிறுவன்:—அம்பி நகரமாட்டேனென்கிறது.

தாய்:—அம்பி எங்கேயாவது நகர்ந்ததுண்டா?

சிறுவன்:—அப்படீன்னா என் அப்பா அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகருமென்றார்?

—K. P. சாரி.

* * *



வழியே செல்லும் சிறுவன்:—அம்மா! அதோ சினிமா நடக்கிறது பார்.

—T. C.

* * *

கிச்சு:—எங்க அம்மா ரொம்ப அழகாக யிருப்பாளேடா?.

ராமு:—அப்படீன்னா நீ உன் அப்பா மாதிரியோ?

—ஜி. ஆர். முருகேசன்.

* * *

தந்தை:—நீர் என் புதல்வியைக் கட்டிக்கொள்ள ஆசைப்படுகிறீர் என்பதை எப்படி நிரூபிக்க முடியும்?

வாலிபன்:—இரவெல்லாம் அவளை நினைத்து நினைத்துத் தூக்கம் வரவில்லை.

தந்தை:—அது ஓர் காரணமா? எனக்குக்கூடத்தான் அரிசிக் கடைக்காரன், ஜவுளிக் கடைக்காரன், பால்காரி, நெய்க்காரி முதலியவர்களை நினைத்து நினைத்து இரவெல்லாம் தூக்கம் வரமாட்டேனென்கின்றது. ஆகவே நான் அவர்களை யெல்லாம் கட்டிக்கொள்ள வேண்டுமென்பது அர்த்தமா?

—C. விஜயா.

* * *

விசிட்டர்:—ஜெயிலில் நீங்கள் எத்தனை வருடமிருந்தீர்கள்?

கைதி:—இரண்டரை வருடம்.

விசிட்டர்:—"சார்ஜ்" என்ன?

கைதி:—சார்ஜொன்று மில்லை; எல்லாம் இலவசந்தான்.

—T. N. மாணிக்கம்.

* * *

சுப்பி:—இன்றைக்குப் படி தயிர் என்ன?

தயிர் விற்பவள்:—தயிரா, ஐந்தணா அம்மா!

சுப்பி:—நாளைக்கு என்னாகும்?

தயிர் விற்பவள்:—நாளைக்குப் புளித்துப்போகும்.

—ஜி. ஆர். முருகேசன்.

* * *

மாஜிஸ்திரேட்:—நீ கோழியைத் திருடியதாக ஆறு சாட்சிகள் சொல்கிறார்கள்; என்றாலும் நீ நிரபராதி என்று கூறுகிறாயே.

குற்றவாளி:—நான் கோழி திருடியதைக் காணவில்லை என்று ஆயிரம் பேரைக்கொண்டு சொல்லச் சொல்கிறேன். அதற்கென்ன கூறுகிறீர்கள்?

—திரவியம் B.A.

* * *

புதிதாக வீட்டுக்கு வந்தவர்:—(சிறுவனைப் பார்த்து) அடே தம்பி! உனக்கு வயதென்ன?

சிறுவன்:—ஆறு.

வந்தவர்:—அப்படியா? ஆறு வயதாகியும் நீ என் கைத்தடி நீளம்கூட இல்லையே!

சிறுவன்:—உங்கள் கைத்தடியின் வயதென்ன?

—H. நாராயணன்.

* * *



எஜமான்:—அடே தடியா! ஏண்டா பூனையைத் தூக்கிப் பிடித்து வைத்திருக்கிறாய்?

வேலைக்காரன்:—எஜமானிக்கு வைத்தியம் செய்ய.

எஜமான்:—எஜமானிக்கு என்ன செய்கிறது?

வேலைக்காரன்:—எலிகடித்து விஷமேறிவிட்டது.

எஜமான்:—அதற்கென்ன செய்யப் போகிறாய்?

வேலைக்காரன்:—எலி விஷத்தை யழிக்கப் பூனையைக் கடிக்கவிடப் போகிறேன்.

—காங்கேயன்.




காரியதரிசி,
முக்குலத்தோர் சங்கம்,
சென்னை.

ஐயா,

கள்ளர், மறவர், அகம்படியர் என்ற மூன்று குலத்தவர்களும் ஒன்று சேர்ந்து நலம்பெற வேண்டுமென்ற கண்ணோக்கத்தோடு சங்கம் தோற்றுவித்து உழைத்துவரும் உங்களுக்கு, ராமநாதபுரம் ஜில்லாவில் நாட்டார்கள் என்ற பெயரால் (பெரும்பான்மையும்) கள்ளர்கள் செய்துவரும் காரியங்களைப் பற்றியத் தகவல் உண்டா?

உலகமெல்லாம் சகோதரர்களாகப் பழகிக் கொள்ளவேண்டுமென்றும் இயலுமானால் செவ்வாய், வியாழன், சந்திரன், சனி முதலிய கிரக வாசிகளையும்கூடச் சகோதரர்களாக்கிக் கொள்ள வேண்டுமென்றும் கருதி வருமிந் நாளையில்—சுதந்திரநாதம் செவிடுபட முழங்கு மிந்நாளையில்—விநாடி தோறும் தம் அருகிருப்போரை உயர்த்துங் குறிவைத்து இந்தியரொவ்வருவரும் பாடுபட்டு வருமிக் காலத்தில்—5000 வருடங்கட்கு மேலாக ஆதித்திராவிடர்கட்குச் செய்துவந்த பாவம் தீரும்படிப் பிராயச்சித்த இயக்கம் தொடங்கி நடாத்தி வரும் இது காலையில்—நாட்டார்கள் என்ற உம் மக்கள் நிரந்தரமாக ஹரிஜனர்களோடு சண்டைபோட்டுத் தொல்லைப்படுத்துவதாய்ச் சென்ற சில வருடங்களாகச் சொல்லப்படுகிறது. இது பற்றி உலகோத்தமர் காந்திஜீகூட தேவகோட்டையில் சிலரைச் சந்தித்துப் பேசிவிட்டார். இருபத்தொரு நாள் பட்டினியுமிருந்துவிட்டார். ஆ! உத்தமர்களில் உத்தமாகிய அப்புனிதர் தம்—பொன்மேனி—புனித யாக்கை—புண்ணிய உடலம் வருந்தத் தவமிருந்த பின்னரும் நம்மக்கள் மனம் மாறவில்லையானால் அந்தோ என்ன சொல்வது?

சுமார் ஒரு மாதத்திற்கு முன்புகூடச் சித்தானூர் என்ற விடத்தில் கள்ளர்கள் ஆதித்திராவிடர்களின் விடுதிகளை நாடிச் சண்டை செய்து ஒரு ஹரிஜனச் சகோதரரைக் கொன்றுவிட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. மேலும் கள்ளர்கள் தம்மை இன்னும் தாக்கிவிடக் கூடுமோவென்று ஹரிஜனர்கள் மிகவும் பயப்பட்டு கொண்டிருப்பதாகவும் வதந்தி உலாவுகிறது. இவை உண்மையானால் ஐயா! நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்போகிறீர்கள்? உங்கள் மக்கள் முன்னேற வேண்டுமென்றால் அவர்களை யொட்டிவாழும் இதரர்களும் முன்னேற வேண்டுமென்று நினைப்பதன்றோ சிறப்புடைத்து? எவனொருவன் தனக்குக்கீழ் வேறொருவனிருக்க வேண்டுமென்று நினைக்கின்றானோ அவனுக்குமேல் ஒருவன் இருந்து வருவது இயற்கைவிதியே! ஆகையால் நாட்டார்-ஹரிஜனர் பகையொழியுமாறு உங்கள் சங்கத்தை முடுக்கிவிட்டுத் தமிழ் நாட்டார் மனதை—காந்திஜீ உள்ளத்தை—வருத்தும் கறையைத் துடைக்க முயலுவீர்களென்று நம்புகிறேன்.

அன்புள்ள,
பகீரதன்.

—

பத்மலாவ் பதி,
கட்டக்.

தம்பி,

நீங்கள் பாபு தாமோதா சத்பதி என்பவரின் புதல்வியான சகுந்தலாவென்ற பெண்ணை (அவளுக்கு 12 வயதிருக்கும் போது) மணந்து கொண்டீர்களென்றும், பெண் வழக்கப்படி உங்கள் "ஆத்துக்கு" அனுப்பப்படாது பாடசாலையில் விட்டு வைக்கப்பட்டாளென்றும், தற்போது சகுந்தலா 18 வயதடைந்து விட்டாளென்றும், 10-வது வகுப்பில் பயின்று வருகின்றாளென்றும், நீங்கள் மனைவி உம் வீட்டுக்கு வாராமை கண்டு கோர்ட்டில் பிராது தொடுத்து நடத்தி விட்டு, பிற்பால் சமாசமாக இருவரும் பிரிந்து கொள்வதென்று முடிவுசெய்து விவாக ரத்துச்செய்து கொண்டீர்களென்றும் ஓர் செய்தி பத்திரிகைகளில் வந்துள்ளது. அது உண்மையானால் உங்கள் செயலை மெச்சுகிறேன். மனமில்லாத பெண்ணை ஏன்கட்டி அழ வேண்டும்? பலவந்தப்படுத்தி மனைவியாக வைத்து அதனால்வரும் அவமானத்தை அடைவதைவிட, விவாக ரத்துச்செய்து மானத்தைக் காப்பாற்றிக்கொள்வதே சிறப்புடையது.

அது போகட்டும். உங்கள் விவாக ரத்து பிராமண உலகில் ஓர் ரிக்கார்டை நிறுவிவிட்டது. உங்கள் மனைவி உங்களைவிட்டுப் போய்விட்டாலும் முதன் முதல் விவாக ரத்துச் செய்துகொண்டீர்களென்ற புகழ் உங்களைவிட்டுப் போகவில்லை. இனி விவாகரத்து மசோதா, சட்டசபையில் வந்தால் பிராமணர்களென்ற சனாதனிகள் சாஸ்திரம் பேசமாட்டார்கள். சீர்திருத்த வாதிகட்கு உங்கள் கதை ஓர் எடுத்துக்காட்டாக நின்று உதவும். வரப்போகும் சீர்திருத்த அரசியலில் ஏராளமாகக் குவியப்போகும் சீர்திருத்த மசோதாக்களுள் ஒன்றில் உங்கட்கு ஓர் ஸ்தானம் கிடைத்து விட்டாலும் விடலாம்.

நன்மைநாடும்,
பகீரதன்.

—

அட்மிரல் ஒக்காடா,
ஜப்பான் முதன் மந்திரி,
டோக்கியோ.

கனம் தங்கிய ஐயா,

சில நாட்களுக்கு முன்பு பத்திரிகை நிருபர்கள் பலர் உங்களை நாடி வரப்போ



ரும் ருஷ்ய-ஜப்பான் யுத்தம் சம்பந்தமாக வினவியபோது இருதேசங்கட்கும் தற்போது யுத்தமெதுவும் ஏற்படப்போவதில்லையென்றும், மஞ்சுகோ—ருஷ்ய எல்லைப்புறங்களில் இருதேசத்து ராணுவ வீரர்கட்குள்ளும் சிறு சிறு சச்சரவுகள் ஏற்பட்டது உண்மைதானெனினும் அதனால் பெரிய யுத்தத்தில் இருதேசங்களும் ஈடுபட்டுவிடப்போவதில்லையென்றும் கூறினீர்கள். அப்பால் ஒரு கேள்விக்குப் பதிலாக கப்பற்படைக்கு 10 கோடி செலவிடப் போவதாகச் சொன்னீர்கள். நீங்கள் யுத்தம் வரப்போவதில்லை என்று கூறியது இருதயத்திலிருந்து வந்த வார்த்தைகளானால் நான் ஆச்சரியமடைகின்றேன் என்பது உண்மை. உலகமெல்லாம் நீங்களும் ஹிட்லரும் சண்டைக்கு வழிதேடுகின்றீர்களென்று நினைப்பதோடு உங்களை யுத்த அவதார மூர்த்திகள் என்றும் சொல்கின்றது. போகட்டும். நீங்கள் யுத்தத்திற்குத் தயாராக இல்லையானால் விவசாய நஷ்டமும் பணக்கஷ்டமு முள்ள இதுகாலையில் ஏன் 10 கோடியைக் கடற்படைக்குச் செலவிடுகின்றீர்கள்? ஒருகால் ருஷ்யாவை அப்பால் பார்த்துக் கொள்வோமென்று ஒதுக்கி வைத்துவிட்டு, வேறு எந்தத் தேசத்துடனாவது போருக்கு எழும்பப் போகிறீர்களா? எப்படியும் இன்றிருக்கின்ற நிலைமையில் உங்கள் வார்த்தையை உலகம் நம்பப் போவதில்லை. எதையும் நாளடைவில் பார்ப்போம்.

அரசியல் தெரியும்
பகீரதன்.

—

போலீசதிகாரி,
சர்ரே நகரம்,
(இங்கிலாந்து.)

ஐயா,

நீங்கள் புரியும் ஆட்சியையும் கையாளும் முறைகளையும் பார்த்தால் எனக்குப் பயமாயிருக்கிறது. ஒரு மனிதனை அவன் மனைவிக்கு முத்தம் கொடுக்கக் கூட விடமாட்டேன் என்கின்றீர்களாம். சமீபத்தில் தொண்டை வியாதி பீடித்த உவில்லியம் சிம்ஸ் என்கின்ற ஒரு துரைமகன் தம் மனைவி மீதிருந்த காதல் வேகத்தால் ஆஸ்பத்திரியிலிருந்து மெதுவாகத் தப்பி, வீட்டுக்கு ஓடிப்போனானும். அங்கு தன் சொந்த மனைவிக்கு முத்தம் கொடுத்திருப்பான் போலிருக்கிறது. அதனைப் பொறாத உமது போலீஸ் வீரர்கள் அவனைக் கைது செய்து ஜெயிலுக்குக் கொண்டு வந்துவிட்டார்களாம். அப்பால் மாஜிஸ்திரேட் முன்பு கொண்டுபோனபோது சர்க்கார் வக்கீல் அவர்கள் 'சிம்ஸ் நோயைப் பரப்ப முயன்றா'னென்று குற்றம் சாட்டிப் பேசினாராம்! அடடா! என்ன அநியாயம்! சொந்த மனைவிக்கு முத்தம் கொடுப்பது பாபமா; நோயைப் பரப்புவதா? எங்கள் நாட்டில் இந்தச் சட்டதிட்டங்களைக் காட்டினீர்களானால் சங்கராச்சாரியர்கள், மடாதிபதிகள் போன்ற சனாதனிகள் தருப்பைப்புல்லை ஆக்னேயாஸ்திரமாக மாற்றி உம் மீது விட்டுச் சுட்டுப்பொசுக்கி விடுவார்கள். எங்கள் நாட்டு சனாதன தர்ம சாஸ்திரங்கள் ஒரு கணவன் மனைவியை என்ன வேண்டுமென்றாலும் செய்யலாம்—அதாவது விற்கலாம், வேறொருவனுக்குக் கொடுக்கலாம், பணயமாக வைத்து விளையாடலாம் என்றெல்லாம்—சொல்கின்றன. மனைவி கணவனைக் கடவுளாகத் தொழவேண்டுமென்பதுதான் சனாதன தருமம். ஒருகால் நீங்கள் நோயிருந்த புருஷனோடுமா அப்படி உரிமை காண்பிப்பது என்று கேட்கலாம். நாளாயணியின் கதையைப் பார்த்தீரானால் தெரியும் உண்மை. அவள் புருஷனுக்குக் குஷ்டரோகம் அதிகரித்துப் புழுத்து வடிந்தது உடம்பு. அவளை 'மாது சிரோன்மணி,' விடவில்லை. அவன் உண்ட சாதத்தைக் குஷ்டரோகப் புழுக்களுடனும் அழுகி வீழ்ந்த புருஷன் கைவிரல்கள் தசைப் பகுதிகள் ஆகியவற்றுடனும் 'உருசியாகச் சாப்பிட்டாள். இப்படிப்பட்டவளுக்கு என்ன கிடைத்தது தெரியுமா? மோக்ஷம், வானுலகம், பொன்னுலகம்!! போகட்டும். இனியாவது உங்கள் தீயமுறையைக் கைவிட்டு எங்கள் உத்தமக் கொள்கையைக் கடைப்பிடித்து மோக்ஷம்பெற முனையுங்கள். இனியாவது புருஷன் மனைவிக்கு முத்தம் கொடுத்தால் சீறி விழாது விட்டுவிடுங்கள்.

சாஸ்திரம் விரும்பும்,
பகீரதன்.

---

## கதரைக் கட்டினால் நாட்டுக்குக் கதியுண்டு

---

## வோட்டர்களின் கடமை

—

### ஸ்ரீயுத ராஜாஜியின் தேர்தல் சொற்பொழிவு

—

"இப்பொழுது வரப்போகும் தேர்தலில் முனைந்து நிற்கும் கட்சிகளில் முக்கியமானது அரசாங்கமும், காங்கிரசும், மகாத்மாவும் என்றே கூறவேண்டும். மகாத்மாவின் தலைமையின்கீழ் காங்கிரஸ் அரசாங்கத்துடன் சத்தியாக்கிரக முறையில் போராடி மகத்தான தியாகத்தைச்செய்து, தாங்கமுடியாத இன்னல்களையும் ஏற்றுக்கொண்டது. காங்கிரஸ் என்றால் ஐம்பது வருஷங்களாக இருந்துவந்த ஒரு உன்னதமான ஸ்தாபனம். அது ஏற்கனவே செய்துவரும் கதாபிவிருத்தி, சுதேசிப்பொருள் அபிவிருத்தி மதுவிலக்கு என்ற பல நிர்மாண வேலைகளுடன் முக்கியமாகச் சென்ற வருஷம் முதல் ஹிந்து சமயத்தை அழித்துக்கொண்டிருக்கும் தீண்டாமை என்ற ஒரு பெரிய இழுக்கைப்போக்க மகத்தான வேலைசெய்து வருகிறது. இந்த இயக்கம் பொதுஜன சம்பந்தப்பட்ட காரியங்களில் ஹரிஜனங்களுக்குச் சம உரிமைகளைக் கொடுக்கப் பாடுபடுகிறது. ஆனால் அது கலப்பு மணத்தையும், சமபந்தி போஜனத்தையும் வற்புறுத்தவில்லை. பொதுஜன ஸ்தாபனங்களான பள்ளிக்கூடம், முதலியவைகளில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சமஉரிமை கொடுப்பதே அதன் முக்கிய நோக்கம். இந்தத் தேர்தல் போராட்டத்தில் ஹரிஜன உத்தாரணம் ஒரு முக்கியப் பிரச்னையல்ல. இப்பொழுது நடக்கப்போகும் தேர்தலில் அபிமானிப்பது அரசாங்கத்தையா அல்லது காங்கிரஸையா, அடிமைத்தனத்தையா அல்லது சுதந்திரத்தையா, என்ற பிரச்னைதான் முக்கியமான பகுதி.

காங்கிரஸின் தோல்வி பாரத தேசத்தின் தோல்வி, காங்கிரஸின் வெற்றி, பாரத தேசத்தின்வெற்றி என்பதில் சந்தேகமில்லை.

### சுயமரியாதைக்காரர்களுக்கு ஓர் எச்சரிக்கை

ருஷ்ய நிலைமையை இந்தியாவிற்குக் கொண்டு வருவதற்காகப் பாடுபடுபவர்

களின் கட்சியை நான் பெரிதும் போற்றுகிறேன். ஆனல் அதே சமயத்தில் ஒரு எச்சரிக்கை செய்கிறேன். இந்த ஆதர்சத்தையுடையவர்கள் வெகு ஜாக்கிரதையாகச் செல்லவேண்டும். வழி கடினமானது. தழல்போல் உள்ளத்தில் கனிந்துக் கொண்டிருக்கும் மகத்தான கேள்வி ஒன்று இருக்கிறது. அது என்னவென்ருல் பொதுமக்கள் அரசாங்கத்தை ஆதரிக்கிருர்களா? அல்லது காங்கிரஸை ஆதரிக்கிருர்களா என்பதுதான். அபேதவாதக் கொள்கைகளை இத்துடன் கலந்து முக்கியப் பிரச்னையை மறக்க வேண்டாம் என்று சுயமரியாதைக்காரர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பிராம்மணர் — பிராம்மணரல்லாதார் என்ற பிரச்னையைக் குறித்து ஒரு வார்த்தை. இதுவரை பிராம்மணர் அரசியல் நிர்வாகத்தில் அதிகமாகப் பங்கெடுத்துக் கொண்டார்கள் என்பதில் அர்த்தமிருக்கிறது. ஆனல் இப்பொழுது பிராம்மணரல்லாதாரும் அதிகப்பட்டு விட்டார்கள். பிராம்மணருடைய சக்தியைப்பற்றி அவர்கள் பயப்படுவது நியாயமில்லை. முக்கியமாக அவர்கள் காங்கிரஸ் பிராம்மணர் ஆதிக்கத்தில் இருந்து வருகிறது என்று நினைப்பதைப் போல் தப்பிதமான அபிப்பிராயம் வேறு கிடையாது.

(மதுரையில் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி செய்த பிரசங்கம்.)

---

### சோக்கநாதபுரத்தில் சுகாதார வாரக் கொண்டாட்டம்

இவ்வூர் ஆண் பெண் பாடசாலைகளில் போன மாதம் 30, 31-ந் தேதிகளில் ஊர்வலமும் விளையாட்டுக்களும் பல பிரமுகர்கள் முன்னிலையில் நடைபெற்றன. 1-9-34-உ மாலை சிவகங்கை ரேஞ்ச் டெப்டி இன்ஸ்பெக்டர் தலைமையின் கீழ் ஒரு கூட்டம் நடைபெற்றது. மாணவர்களால் வரவேற்புப் பத்திரம் வாசிக்கப்பட்டு, பிறகு மாணவர்கள் சுகாதாரத்தைப் பற்றிச் செய்த பிரசங்கங்களுக்குப் பரிசு வழங்கப்பட்டது. பிறகு திரு. மெ. சு. உ. சோமசுந்தரம் செட்டியார் கல்வி என்ற பொருள் பற்றி ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினர். தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் இனிது நிறைவேறியது. கூட்டத்திற்குப் பல பிரமுகர்களும் பொதுமக்களும் வந்திருந்தார்கள் என்று ஒரு நிருபர் அறிவிக்கிருர்.





## இங்கிலாந்தில் மீராபென்

(பியர்ஸன் வீக்லி என்ற பத்திரிகையில் மார்ஸியா டி ஸில்வா எழுதுவது.)

இருபத்தியைந்து வருஷங்களுக்கு முன், இராணுவ உத்தியோகஸ்தரின் புத்திரியான மாடிலீன் ஸ்லேட் என்ற 17 வயதுள்ள நங்கை இந்தியாவில் வசித்து வந்தாள்.

இன்று அவள் மீராபென் என்ற பெயரில் ஒரு ஹிந்து மாதாகத் தனது மேல்நாட்டு நாகரிகச் சின்னங்களைப் போக்கி விட்டாள். அவளது சாந்தம் மனதை வசீகரிக்கிறது.

நான் அவளை ஹைட் பார்க்கிற்குப் பக்கத்திலுள்ள ஹோட்டலில் சந்தித்தேன். அவள் கதராடை யணிந்து ஒரு ஹிந்து மாதுபோல் தரையில் உட்கார்ந்திருந்தாள். தலையை மழுங்கச் சிரைத்து முக்காடு இட்டிருந்தாள்.

அந்த அறையில் சென்றவுடன் ஏதோ சன்யாஸினியின் ஆச்ரமத்தினுள் நுழைவதுபோல் இருந்தது.

"பத்து வருடங்களுக்குமுன் நான் காந்தியாச்ரமத்திற் சேர்ந்தேன். இந்தப் பத்து வருஷங்களாக அது தவறு என்று வருந்தியதில்லை. அங்கு சென்றவுடனேயே எனது இனஜன பந்துக்களை யடைந்ததுபோல் மனதில் ஓர் திருப்தி ஏற்பட்டது.

"இதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. மறுபிறப்பில் நம்பிக்கை வைத்தால் இதற்கு வெகு லேசாகக் காரணம் சொல்லிவிடலாம். எனது ஆத்மா ஹிந்து சமுதாயத்தைச் சேர்ந்ததுபோலும். இயற்கையின் விதிப்படி நடந்தால் நான் இறந்து மறுபிறவியில்தான் நான் ஹிந்து சமுதாயத்திற்குச் செல்ல முடியும். மகாத்மாவின் ஆத்மிக சக்தியின் கவர்ச்சியினுல் இது அவசியமில்லாமல் போய்விட்டது.

"வாழ்க்கையின் விபரங்களைக்கூறி வருகிறேன். எனது தந்தை மூன்று வருஷம் கப்பற் படைக்குத் தலைவராகக் கிழக்கே இருந்து வந்தார். எனது வாழ்க்கை ஒரு குறுகிய நோக்கத்தையுடைய ஒரு ஆபீஸரின் மகளுடையதாக இருந்தது. அது என் மனதிற்கு ஒப்பவில்லை.

"கொஞ்ச நாட்களில் இங்கிலாந்திற்குத் திரும்பினேன். அப்பொழுது யுத்தம் ஆரம்பித்தது. அந்தச் சமயத்தில் தான் மேல்நாட்டு நாகரிகத்தில் ஏதோ ஒரு கோளாறு இருக்கிறது என்று ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. இந்த நினைப்பு எனது வாழ்க்கையைத் துக்ககரமாக்கி என் மனத்தில் ஒரு கலக்கத்தை உண்டு பண்ணியது. ஏதாவது ஒரு கொள்கைக்காகத் தொண்டு செய்ய வேண்டுமென்ற ஆவல். ஆனல் என் மனதிற்குகந்த கொள்கை கிடைக்கவில்லை. ஹிம்சைமுறை தவறு என்று அறிந்த பிறகு இந்த யுத்தத்தில் பங்கு எடுத்துக்கொண்டு தொண்டு செய்ய மனம் ஒப்பவில்லை.

### இரண்டாவது கிரிஸ்து

"பிரஞ்சு அறிஞரான ரொமெய்ன் ரோலந்து என்பவருடைய புத்தகத்தை ஒருநாள் படித்தேன். உடனே எழுதியவரைச் சந்திக்க வேண்டுமென்று பட்டது. அவருக்குக் கடிதம் எழுதினேன். சந்தித்தேன். அப்பொழுது காந்தியைப்பற்றிச் சொன்னர். காந்தி இந்த வுலகத்தின் இரண்டாவது கிரிஸ்து என்ருர். அப்பொழுதுதான் மகாத்மாவைப்பற்றி ஒரு கிரந்தம் எழுதி முடித்திருப்பதாகவும் அதை அவசியம் வாசிக்கவேண்டும் என்றும் கூறினர்.

"அந்தப் புத்தகத்தை வாசித்ததும் எனது இலக்ஷ்யத்தை யடைந்துவிட்டதாகப் பட்டது. காந்தியை யடைந்து அவருக்குத் தொண்டு புரியவேண்டும் என்று எனக்குப் பட்டது. உடனே இந்தியாவிற்குக் கப்பல் ஏறத் தயாரானேன். பிறகுதான் நான் அந்தத்தொண்டிற்கு என்னைப் பண்படுத்திக் கொள்ளவில்லை என்றுபட்டது.

"பிறகு ஒரு வருஷம் நூற்கவும் நெய்யவும் கற்றுக்கொண்டு ஆச்ரம உணவுகளைப் புசிப்பதற்குப் பழகிக் கொண்டேன்.

"அந்தச் சமயத்திலே எனது கோரிக்கைகளை மகாத்மாவிற்கு எழுதி நான் என்னைப் பண்படுத்திக் கொள்ளுவதையும் அறிவித்தேன். நான் பூரணமாகத் தயாராகிவிட்டேன் என்று எனக்குப் பட்டவுடன் நான் வரலாமா என்று மறுபடியும் மகாத்மாவிற்கு எழுதினேன். வாலாம் என்ற பதில் வந்தது.

"இந்தியத் தேசீயத் தலைவரான வல்லபாய்ப் பட்டேல்தான் என்னை முதன் முதன் முதலாகச் சந்தித்தார். அவரைப் பார்க்கும்பொழுது எல்லாம் அந்த நாள் நினைவிற்கு வருகிறது— அது 1925 வருஷம் அக்டோபர் 25-ந் தேதி.

"வல்லபாய் என்னைக் காந்தியிடம் அழைத்துச் சென்ருர். "நீ எனக்கு மகளாக வாழ்வாய்" என்று மகாத்மா வரவேற்ருர். உடனே என்னைக் கஸ்தூரிபாயிடம் அழைத்துச் சென்று அறிமுகமாக்கினர். அது முதல் நான் அவர்து புத்திரியாக இருந்து வருகிறேன்."

மீராபாய், ஆச்ரமத்தின் வேலைகள் விடியற்காலை நான்கு மணியிலிருந்து இரவு ஒன்பது மணிவரை, எப்படி நடந்தேறுகிறது என்று எனக்குச் சொன்னுள். அவளது சிறை அனுபவத்தைப் பற்றி வருந்தவேயில்லை. இங்கிலாந்தின் மேல் அவளுக்கு மனக்கசப்புக் கொஞ்சமேனும் கிடையாது. திடீரெனக் காந்தியைவிட்டு விலகியதன் காரணம் என்னவென்று கேட்டேன்.

"இங்கிலாந்தில் எனக்கு வேலையிருக்கிறது [illegible] வசிய் எண்ணம் திடீரென்று [illegible] ய தத்தம்

"உடனே [illegible] என்று மகாத்மாவிடம் எனது எண்ணத்தைக் கூறினேன். 'அப்படி எண்ணமிருந்தால் அவசியம் போகவேண்டும்' என்று சாந்தமாகப் பதிலளித்தார்."

"தங்களுடைய பூரண ஆசீர்வாதத்துடன்தான் செல்லவேண்டும் என்றேன். அவரும் மனமுவந்து ஆசீர்வதித்தார். பிறகு ஐந்து தினத்தில் இங்கிலாந்திற்குக் கப்பல் ஏறினேன்."

"நான் இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லந்து முதலிய பிரதேசங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து சத்தியத்தைப் பரப்பப்போகிறேன். எங்கு பார்த்தாலும் இந்தியப் பிரச்னையைப் பற்றி அன்புடனும் ஆதரவுடனும் கேட்கிருர்கள். இன்று அவர்களுடைய அன்பு மறைமுகமாக இருக்கிறது. சத்தியத்தினுல் அறிவு தெளிந்தால் அன்பும் ஆதரவும் சக்தியுடன் பிரகாசிக்கும்" என்று மீராபென் பதிலளித்தார்.




### இராவணன்

சீதை தங்கிவந்த குடிசையை மண்ணோடு தூக்கிக்கொண்டு போய்விட்டானென்றால் நம் பல்லெலாம் வெளிப்பட்டு விடுகின்றன; முகத்திலும் சிற்சில கோடுகள் தோன்றி விடுகின்றன. குடிசையைத் தூக்கிக்கொண்டு செல்வது இயலுமாவென்று நினைக்கிறோம். ஆனால்—நம் நகைப்பு, சுத்தப் பிசகென்று காண்பிக்கப் போகிறார்கள் ருஷ்ய ராவணர்கள். மாஸ்கோவில் நான்கு அடுக்குள்ள ஒரு பெரிய மாளிகையை ருஷ்யர்கள்—குடிசையல்ல— அது தற்போதிருக்குமிடத்திலிருந்து 117 அடி தள்ளி வைக்கப்போகிறார்கள். தள்ளும்போது அம்மாளிகையில் வசிக்கின்ற 370 பேரும் அங்கேயே தத்தம் வேலைகளைச் செய்துக் கொண்டு இருப்பார்களாம். மின்சார விளக்குகளும் அணைந்துவிடமாட்டாவாம். அந்தோ! எப்படித்தான் இந்த உலக நாகரிகர்களான ருஷ்யர்கள் ஒரு பெரிய மாளிகையை நகர்த்தப் போகிறார்களோ? இவர்களது வேலை பல்லாயிரம் இராவணர்களுடைய வேலையை ஒத்திருக்கின்றதல்லவா!.... .......ராமாயணப் பிரியர்களே! சனாதன சிரேஷ்டர்களே! உங்கள் வால்களைக் கிளப்ப ஓர் தருணம் கிடைத்துவிட்டது! ருஷ்யருக்கு வாழ்த்துப் பத்திரம் படித்துக் கொடுங்கள்! ஸ்ரீ சங்காசாரியாரே! புராணப்பெருமை பேசுவதை இனிக் கொஞ்சம் ஊக்கப்படுத்தலாம் அல்லவா?

### தூங்கக்கூட

விடுகின்றார்களில்லை ஏழைகளை பணக்காரர்கள்! "ஆண்டவனால் மனிதர்கட்கென்று படைக்கப்பட்ட" சொத்துச் சுகங்களையெல்லாம் வசதியுடைய சிலர் கைப்பற்றிக்கொண்டு மற்றோரைத் தவிக்க விட்டுவிடுவதாலேயே ஏழைகளென்ற ஒரு வகுப்பார் உலகில் ஏற்படுகின்றார்கள் என்று அறிவியல் வாதிகள் கூறுகிறார்கள். அது எப்படியாவது போகட்டும். ந்யூயார்க் தனவந்தர்கள் நகரத்தை யெல்லாம் தங்கள் கைகளில் அடக்கி வைத்துக்கொண்டு ஏழைகளைத் தவிக்க விடுகின்றார்களென்பது வெளிப்படை. அங்கு பல ஏழைகள் தங்க இடமின்றி—சென்னையும் இவ்வுதாரணத்தை விட்டு மாறுபட்டதல்ல—பொது நந்தவனங்களில், திறந்த வெளியில், மாச்சுவட்டில், படுத்து இரவு தூங்குகிறார்கள். பாவம்! இவர்களை அங்குகூடவும் படுக்கவிடுகின்றார்களில்லை தனவந்தர்கள்! சமீபத்தில் ஒரு சட்டமியற்றி நந்தவனத்தில் எவரும் இரவு பத்து மணிக்கும் காலை ஆறரைக்கும் அப்பால் தூங்கலாகாது என்று கட்டளையிட்டிருக்கிறார்கள். இந்தச் சட்டமியற்றும் தனவந்தர்கள் ஏழைகள் தூங்குவதற்கென்று தனியிடம் கட்டிக் கொடுக்கலாகாதா? இல்லாரை எவ்வழியிலும் தொல்லைப் படுத்துவதுதானா உள்ளவர்களின் கடமை?

### அல்ஜியேர்சில் நடந்த

ஒரு சண்டையில்போடப்பட்ட குண்டுகள் லண்டன் "சண்டே எக்ஸ்பிரஸ்" பத்திரிகையின் தலையில் வந்து பாய்ந்து விட்டதாம். இப்போது அல்ஜியேர்ஸ் பகுதியில் யூதர்கட்கும் அராபியர்கட்கும் யுத்தம் நடக்கிறது. இந்தப் பகுதி பிரஞ்சுகாரர்களைச் சேர்ந்ததாகும். அவர்கள் யுத்தத்தை அடக்கும்பொருட்டு அராபியர்கட்கெதிராக நீக்ரோவர் என்ற கருப்பு ஜாதிப் படையை உபயோகித்தனர். இதனைக் கண்டதும் டெய்லி எக்ஸ்பிரஸ் என்ற வெள்ளைப் பத்திரிகைக்கு வயிறெரிந்துவிட்டது. ஜாதித் திமிர்பிடித்த அப்பத்திரிகை "இதென்ன அநியாயம்! உலகத்தையே தலைகீழாகப் புரட்டி விட்டார்களே பிரஞ்சுகாரர்கள்! வெள்ளை ஜாதியாரைக் காப்பாற்றக் கருப்புச் சேனையையா உபயோகிப்பது!" என்று ஓலமிடுகிறது. இந்த நிறத்திமிர் இருப்பது வரையிலும் வெள்ளையர் உருப்படப் போவதில்லை. கலகமும் வெறுப்பும் இந்த எண்ணத்தாலேயே ஏற்படுகின்றன. கருப்பு ஜாதியார் தம் வயிற்றுக்காகப் பாடுபட்டுத் தேடி வைப்பவற்றை வெள்ளையர் கொள்ளையடித்துச் சாப்பிடுவதைவிட, கருப்பர் இரத்தத்தால் வெள்ளையர் பாதுகாப்புப் பெறுவது பாதகமாவென்ற சங்கதி எக்ஸ்பிரசுக்குப் புத்தியில் படவில்லை போலும்.

### பன்றிகள் பாட்டை

ஆபத்திலாக்கிவிட்டார் கானாஜில்லா மாஜிஸ்திரேட். அந்த ஜில்லாவில் பலர் பன்றியைச் சுடுவதென்ற பெயரால் துப்பாக்கி லைசென்ஸ் வாங்கி வைத்திருக்கிறார்கள். இப்போது மாஜிஸ்திரேட், லைசென்ஸ் கொடுக்க விரும்பவில்லை போலிருக்கிறது; ஆதலால் ஒரு உத்தரவு மூலம் ஒரு வருடத்தில் ஆறு பன்றிகளைக் கொல்லாதவர்கட்கு லைசென்ஸில்லை என்று கூறியிருக்கிறார். ஜனங்கள் துப்பாக்கியைக் கைவிட விரும்பமாட்டார்களல்லவா? ஆகவே என் செய்யக்கூடும்? எப்படியாவது உருண்டு புரண்டு பன்றிகளைச் சுட முயலுவார்கள்; ஆகவே ஏராளமான பன்றிகள் இறக்க வேண்டிவரும். இது பற்றி பம்பாய்ச் சட்டசபையில் கேள்வி கேட்கப்பட்டபோது சர்க்கார் (ஹோம்) மெம்பர் "கானாவில் யானைகளும் குரங்குகளுமே பயிர்களை அழிக்கின்றனவே அன்றிப் பன்றிகள் அதிகமாகக் கெடுதி செய்வதில்லை" என்று பதில் சொன்னாராம்.

### சலித்துப் போய் விட்டதால்

மனைவியை விற்று விட்டானாம்! மிஸ் எடித் டெய்சன் என்ற ஒரு ஆங்கிலப் பெண் ஒரு நாள் பாரிஸ்நகரின் இராவாழ்க்கையைப் பார்ப்பதற்காகச் சென்றாள். அங்கு ஒரு இளைஞன்—நாகரிகன்



—தடபுடல் பேர்வழி— அவளை சந்தித்து சிநேகமானான். அவளும் சில இடங்களில் தனியாகப் போக முடியாததால் அவனிடம் நட்புக் கொண்டாள். அதன் மேல் இருவரும் பல விடங்களைப் பார்வையிட்டனர். ஒரு ஹோட்டலில் சென்றதும் பணக்காரனான ஒரு தென்னமெரிக்கன் வாலிபனைச் சந்தித்தான். இருவரும் "ஸ்பெயின்" பாஷையில் நீண்ட நேரமாகப் பேசிக் கொண்டார்கள். அதுபோது பாஷை விளங்காத டெய்சன் சிரித்துப் பக்கத்திலேயே உட்கார்ந்துக் கொண்டிருந்தாள். அமெரிக்கன் இடையிடையே அவளைத் திரும்பிப் பார்க்க அவளது அதிகமான வசீகரம் அவனைப் பிடித்திழுத்தது. இங்ஙனம் சில நிமிஷங்களானதும் வாலிபன் டெய்சனிடம் 'சற்று வெளியே போய் வருகிறேன்' என்று கூறி எழுந்து போனான். அப்பால் பெண் அங்கிருக்க மனமில்லாது தன்னறைக்குச் செல்ல எழுந்தாள். உடன் அமெரிக்கன் வழிமறித்து "நீ என்னோடு தான் வாழ வேண்டும். பவுன் நூறு கொடுத்திருக்கின்றேனல்லவா? ஒப்பந்தப்படி நடந்துக் கொள்வதே தகுதி என்றான்." டெய்சனுக்குப் பொருள் விளங்கவில்லை. எனவே பரபரப்பு ஏற்பட்டது; பலர் கூடினார்கள்; போலீஸ் புலிகளும் குதித்து வந்தன. அப்பால் விசாரிக்கையில், தென்னமெரிக்கனிடம் வாலிபன் டெய்சனைத் தன் மனைவி யென்று கூறியும், அவளுடனுள்ள வாழ்க்கையில் சலிப்புற்று விட்டதால் 100 பவுனுக்கு விற்றுவிடப் போவதாகச் சொல்லியும் ஒப்பந்தம் பேசிப் பணம் வாங்கியிருப்பதாகத் தெரிந்தது. புலிகள் எங்கும் கள்வனைத்தேடின. அவனைக் காணமுடியுமா? பறந்து போய் விட்டான் அவன்.

### கோட்டயம்

என்ற ஊரில் ஒரு கான்ஸ்டெபில் தன் வீரத்தைக் காட்டிவிட்டார். அவர் ஒரு நாள் ஒரு வீட்டில் புகுந்து தனியாக விருந்துகொண்டிருந்த ஒரு பெண்ணினிடம் தன் உத்யோகத்தின் மகாத்மியத்தைக் காண்பித்தார் போலிருக்கிறது. அதற்கு அப்பெண் இணங்காது மறுத்திருக்கலாம். உண்மை எப்படியோ! அவ்வீட்டிலிருந்து கூக்குரல் ஓசை வெளிப்பட்டது. உடனே பக்கத்து வீட்டாராகிய நான்கு நாயர் வாலிபர்களும் ஒரு பிராமண இளைஞனும் பெண்ணைத் தப்புவிப்பதற்காக வீட்டுக்குள் ஓடிப்போனார்கள். அதனைக் கண்டு—வீரால்லவா கான்ஸ்டேபில்—ஒரு கத்தியை எடுத்துக்குத்திவிட்டார். குத்துண்ட நாயர்களில் ஒருவர் ஆஸ்பத்திரியில் மாண்டுபோனார். மற்ற நால்வரின் நிலைமை மிகவும் கவலைக்கிடமாயிருக்கிறது. அந்தக் கான்ஸ்டெபிலை அவனுடைய அண்ணைக்களாகிய மற்றக் கான்ஸ்டெபில்கள் கைது செய்து சிறைப்படுத்திருக் கிறார்களாம்.

### கபிஸ்தல மென்பது

இந்துக்களுக்கோர் புண்யபதி. அங்கு பிறந்த வரும் சென்ற வரும்கூட மோக்ஷமடைவார் களாம். ஆனால் சமீபத்தில் அங்கு பிறந்த ஒரு குழந்தை மோசமடைந்து விட்டது. சில வாரங்கட்கு முன்பு ஒரு குடியான ஸ்திரீ 15 மாதம் கர்ப்பமாயிருந்து பின் ஒரு குழந்தையைப் பெற்றாள். பெறப்பட்டது குழந்தையாகவில்லை. அதற்குப் பதிலாக நல்லபாம்பா யிருந்தது. அப்பாம்புக் குழந்தை 4, 5, நாள் உயிரோடிருந்ததாம். (எப்படித்தான் தாயார் அருவருப்புப் படாமலிருந்தாளோ). ஐந்தாவது நாளன்று அது ஒருவரைக் கடித்துவிட்டது. கடிபட்டதும் அவர் இறந்து போனார். உடன் குழந்தை வாழ்வு போதுமென்று நினைத்துக் கல்லாலும் தடியாலும் அதற்கு முற்றுப்புள்ளி போட்டு விட்டார்கள். இந்தச் சம்பவத்தை அதாவது பாம்பை ஈன்ற சம்பவத்தை—கருப்பத் தடையை எதிர்த்துப் பேசுவோர் தயவு செய்து தாம் பிரசங்கப் செய்யும்போது சற்று மனதில் வைத்துக் கொள்ளவேண்டும்.

---

## ஜப்பான் இந்தியர் நன்கொடை

ஜப்பானிலிருக்கும் இந்திய வியாபாரிகள் தீண்டாமையை யொழிக்க ரூபாய் 3892–9–0 காந்திஜிக்குத் தீண்டாமை நிதிக்காக அனுப்பி இருக்கிறார்கள்.

## பந்தலுக்காக 2 லக்ஷம் கஜம்

பம்பாயில் நடைபெறப்போகும் காங்கிரஸ் மகாநாட்டிற்கு, பந்தல் அமைப்பதற்கு 25000 ரூ. பெறுமான 2 லக்ஷம் கஜம் நீளமுள்ள கதர் உபயோகிக்கப்படும் என்று தெரிகிறது.

## காங்கிரஸ் அபேட்சகர்கள் ஜாபிதா

### மாளவ்யாஜீக்குப் போட்டியில்லை

### பார்லிமெண்டரி போர்டு அறிக்கை

வார்தா, செப். 10உ

காங்கிரசின் சார்பாகக் கீழ்க் கண்டவர்கள் அபேட்சகர்களாக நிற்பார்களெனக் காங்கிரஸ், பார்லிமெண்டரி போர்டு தெரிவிக்கிறது.

சென்னை மாகாணம்:—

| | |
|---|---|
| கஞ்சம், விசாகப்பட்டணம் | திரு வி. வி. கிரி. |
| கோதாவரி, கிருஷ்ணா. | திரு. நாகேஸ்வர ராவ் பந்துலு. |

நெல்லூர், குண்டூர்:— புரொபஸர் என். ஜி. ரங்கா.

சென்னை நகர்: திரு. எஸ். சத்யமூர்த்தி.

| | |
|---|---|
| செங்கல்பட்டு தென் ஆற்காடு | திரு. முத்துரங்க முதலியார். |

திருச்சி, தஞ்சை: டாக்டர் ராஜன்.

கோவை, சேலம்: வட ஆற்காடு திரு. அவினாசிலிங்கம் செட்டியார்

மலையாளம், தென் கன்னடம்: திரு. சாமுவேல் ஆரன்.

| | |
|---|---|
| சென்னை வர்த்தகர்த் தொகுதி, | திரு. சுவாமி வெங்கடாசலம் செட்டியார். |
| மதுரை, ராமனாதபுரம் திருநெல்வேலி | திரு. குமார சாமி ராஜா. |

சித்தூர்—முடிவு செய்யப்படவில்லை.

மற்ற மாகாணங்களிலுள்ள தொகுதிகளுக்கு அபேட்சகர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

டாக்டர் பி. சி. ராய் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பது வருமாறு:—வகுப்புப் பிரச்னை சம்பந்தமாய் வாக்குச் சுதந்திரம் அளிக்க பார்லிமெண்டரி போர்டு மறுத்துவிட்டது.

பண்டித மாளவியா, திரு. ஆனே, திரு. சரத் சந்திரபோஸ் ஆகியோருக்கு போட்டியாகத் தங்களுடைய அபேட்சகர்களை நிறுத்த வேண்டாமென்று போர்டு முடிவுசெய்துளது. பண்டித மாளவியாவுக்கும் திரு. ஆனேக்கும் பதிலாக திரு. டி. சி. கோஸ்வாமி, எல்லைப்புறத்தைச் சேர்ந்த ஜனாப் சமின் ஜான் கான் ஆகியோரைப் போர்டு தேர்ந்தெடுத்துளது.

